ஓம் ஸ்ரீ குருப்யோ நமஹ

# தேவி காலோத்தரம்



## விளக்க உரை

சுவாமி பிரபஞ்சநாதன்

# நூல் விளக்கம்

| | | |
|---|---|---|
| **நூலின் பெயர்** | : | தேவி காலோத்தரம் |
| **ஆசிரியர்** | : | சுவாமி பிரபஞ்சநாதன் |
| **மொழி** | : | தமிழ் |
| **வகை** | : | விழிப்புணர்வு |
| **முதற்பதிப்பு** | : | 2023 |
| **நூலின் அளவு** | : | டெம்மி |
| **பக்கங்கள்** | : | 45 |
| **தாள்** | : | A4 [8.03" X 11.07"] |
| **எழுத்து அளவு** | : | 14 புள்ளிகள் |
| **உரிமை** | : | அனைவருக்கும் |
| **கட்டமைப்பு** | : | சாதா பைண்டு அட்டை |
| **கணினி அச்சு** | : | ஓம் கிராபிக்ஸ் |
| **விலை** | : | அகவிழிப்பு |

# தேவி காலோத்தரம்

## <u>முகவுரை</u>

“**தேவி காலோத்தரம்**” என்றால், அந்த பரமன் பார்வதிக்கு உபதேசித்த மிக உயரிய ஆன்ம ஞானத்தை அளிக்கக்கூடிய “**வித்யாதத்துவம்**” அல்லது “**பரவித்தை**” என்று போற்றப்படுகின்றது.

பொதுவாக, வேதாகமங்கள் (**வேதம் - ஆகமம்**) அந்த பரமனை அடைவதற்கான பாதையைக் காட்டும் படிநிலைகள் இரண்டு விதமாகக் காணப்படுகின்றன.

பணிவும், அடக்கமும் கொண்டவர்கள் பெரியவர்களை நமஸ்கரிக்கும் பொழுது, முதலில் அவர்களது பாதங்களைத் தொட்டு பணிந்து, ஆசி பெறுவதும், அதன்பிறகு அவர்களது முகத்தைப் பார்த்துப் பேசுவதும் நம்முடைய நடைமுறை வாழ்க்கையில் உள்ளதுப் போன்று, அந்தப் பரமனை பணியும் முறைகளும் இரண்டு விதங்களில் உள்ளன.

அதிலே, இரண்டற்ற ஏகனாகிய உருமற்ற நிர்குண பிரம்மத்தை உருவத்தில் சகுண பிரம்மமாக பணிவதாக இருப்பின் முதலில் அவனது பாதம் தொட்டுப் பணியும் பக்திப் பாதையில் ஆகமங்களும், அடுத்து, அவனது முகம் பார்த்து மலர வேதங்களும் உதவுகின்றன.

அதாவது, வேதாகமங்கள் பரமனைப் பணியும் பாதைகளைக் கூற வரும்போது, அவனது உடல் பகுதியாக ஆகமங்களும், தலைப்பகுதியாக வேதங்களும் உள்ளன என்பதினால், வேதங்களில் உள்ள உபநிஷதங்களை இறைவனது சிரசாகவும், ஆகமங்களில் உள்ள உபகாண்டங்களை இறைவனது உடலாகவும் இங்கு காட்டப்படுகின்றன.

உபநிஷதங்களாகிய வேத, வேதாந்தங்கள் கூறுகின்ற பரமன் இரண்டற்ற ஏகமாக இருக்கின்ற கேவலம் (தனித்த) என்பதினால், ஒன்றேயாகிய அவனது தலை என்றும், ஆகமங்கள் கூறுகின்ற பரமன் பலவாறான உருவங்களில் வழிபடக்கூடிய அவனது உடல் உறுப்புகளாகவும் போற்றப்படுகின்றன.

அதிலே, மூர்த்தி ரூபமாக வழிபடும் விக்கிரங்களையும், கோயில்களின் கட்டுமான அமைப்புகளையும், அந்த கோபுரங்களின் நிர்மாணத்தையும், அதற்கான கும்பாபிஷேகங்களை நடத்துவதற்கான விதிமுறைகளையும், வழிமுறைகளையும், மூர்த்திக்கு ஏற்றவாறு எடுத்துக் கூறுவதே ஆகமகங்கள் ஆகும்.

பொதுவாக, ஆகமங்கள் இறைவனின் உருவ வழிபாட்டு முறைகளை மட்டுமே எடுத்துக் கூறினாலும், அவைகளில் இதுப்போன்ற ஒரு சில உப ஆகமங்கள் அந்த இறைவனை உருவமற்றவனாக வழிபடக்கூடிய வழியைக் கூறுவதாகவும் உள்ளது. அதிலே ஒன்றுதான் இந்த "**தேவி காலோத்தரம்**" என்னும் ஞான காண்டமுமாகும்.

பொதுவாக, சரியைகளையும், கிரியைகளையும் பற்றிப் பலவாறாகக் கூறும் ஆகமங்களுக்குள் இப்படிப் பூரண அத்துவித ஞானத்தைப் போதிக்கும் "**தேவி காலோத்தரம்**" என்ற இந்த நூல் ஈசனால், ஈஸ்வரிக்கு உபதேசம் செய்யப்பட்டது ஆகும்.

அந்த வகையிலே, இறைவனது அறிவுப்பூர்வமான உபதேசங்களை அறிந்துக் கொள்ளக்கூடிய, அறிவைக்கொண்ட உயிரினம் ஒன்று உண்டு என்றால், அது **மனித இனம்** என்றே கூறலாம்.

அத்தகைய அரிதான மனிதப்பிறவியை அடைந்த உயிர்களெல்லாம், உயரிய அறிவுப் பரிமாணத்தின் மேலோங்கிய நிலையாகிய **மனோவாக்காயம்** என்ற நிலைக்கு உயர்ந்து, **மனம், வாக்கு**, மற்றும் **காயம் (உடல்)** அடைந்ததின் அதியுன்னத நோக்கம் என்னவெனில், அந்த ஏக அறிவாக விளங்கும் எல்லையற்ற அறிவை (ஆன்மாவை) எல்லாமாக அறிந்து, இருமைகளைக் கலைந்து, இரண்டற்றவனாகிய ஒருவனை தன்னில் தானாய் உணரும் உயரிய பக்தி நிலையாகிய **அனன்யபக்தி** (அன்னியமில்லாத அன்பு) ஒன்று மட்டுமே அனைத்திலும் தன்னைக் காணுகின்ற, பரிபக்குவ நிலையாகிய பரமானந்த நிலைக்கு அழைத்துச் செல்லும் உயரிய சாயுச்சியப் பாதையாகிய **பரமுக்தி** பாதை ஆகும்.

அத்தகைய பாதையில் பயணிக்கும் பாடங்களை பகவான் பரமசிவன் அன்னை பார்வதி தேவிக்கு உபதேசிப்பதாக இந்த "**தேவி காலோத்தரம்**" என்ற நூல் அமைந்துள்ளது.

அதாவது, மனிதன் மரணமற்ற பெருவாழ்வை வாழ விரும்பி, அதற்காக பயணிக்கும் பாதைகள் நான்கு வகைகளில் நடைமுறையில் உள்ளன. அவைகளை **மந்ததரம், மந்தம், தீவிரம், தீவீரதரம்** என்று கூறலாம். அந்தவகையிலே, **சரியை, கிரியை, யோகம், ஞானம்** என்ற முறையில் சாதகன் முயற்சிக்கும் பாதைகளில் சாலோகப் பாதையில் **பதமுக்தி** என்பதும், சாயுச்சிய பாதையில் **பரமுக்தி** என்பதும் இருவகையில் இருக்கின்றன.

அத்தகைய முக்திப் பாதைகளில் பயணிக்கும் பாமரன் பவித்திரமான பரமுக்தியைத் தருகின்ற பரமானந்த நிலைக்கு உயரும் உத்திகளை பரமசிவன் அன்னை பார்வதி தேவிக்கு உரைக்கும் உபதேசங்கள் அடங்கியதாக இந்த "**தேவி காலோத்தரம்**" என்ற நூல் வடமொழியில் அமைந்துள்ளது. அத்தகைய இந்த நூல் **ஞானம், ஞானசாரம்** என்னும் இரண்டு பகுதிகளைக் கொண்டது.

வடமொழியில் உள்ள நூலாகிய '**தேவி காலோத்தரம்**' என்ற சிவ பரத்துவத்தை, "**சுருதி சூக்தி மாலை**" என்ற பெயரில் **ஸ்ரீ ஹரதத்தாச்சாரியர்** என்ற ஆச்சாரியர் 151 ஸ்லோகங்களை கொண்ட பாமாலையாகப் பாடி அந்த மூல நூலுக்கு ஒப்பாக சம்ஸ்க்ருத மொழியிலேயே அதைப் படைத்தார்.

அதற்கு '**தாத்பர்ய ஸங்க்ரஹம்**' என்ற மற்றொரு பெயரும் வழக்கத்தில் உள்ளது. இதைப் பல மொழிப் பண்டிதர் **பாலசுப்பிரமணிய சாஸ்திரிகள்** அவர்களால் தமிழ் மொழியில் மாற்றம் செய்து, தமிழில் படிக்க விரும்பும் நல் உள்ளங்களுக்காக கொடுக்கப்பட்டது.

மேலும், வடமொழியில் உள்ள இந்த நூலை, '**தேவி காலோத்தர ஆகமம்**' என்பதாக 85 சுலோகங்களுடன் கூடியதாகவும், அதன் விருத்தியுரைகளை பல தமிழாசிரியர்கள் வாயிலாக மணிப்பிரவாள நடையில் சம்ஸ்க்ருதமும், தமிழும் கலந்த நடையில் 1875 - ஆம் ஆண்டுகளில் தொடங்கி, அதற்குப்பிறகு அனேக தமிழாசிரியர்களால் இந்த நூல் அச்சுக்களில் பிரசுரிக்கப்பட்டு, தமிழ் புத்தகங்களாக வெளிப்பட்டது.

பிறகு, தமிழாசிரியர் வீராசாமி செட்டியார் மாணக்கரான **முருகேஷ முதலியார்** என்பவரால், "**தேவி காலோத்தர உரைபாடம்**" என்ற முறையில் சம்ஸ்க்ருத மூலம் இன்றி, உரைநடை நூலாக மட்டுமே தமிழ் விளக்கம் தரப்பட்டு வெளியாகியது.

அதன்பிறகு, வடமொழியில் உள்ள 85 சுலோகங்களுக்கும், அருமையான தமிழ் மொழியில் மொழிப் பெயர்ப்பாக 85 வெண்பாக்கள் கொண்ட கவித்துவம் நிறைந்த பாடல்களாக பல தமிழாசிரியர்கள் பாடியிருக்கின்ற நிலையில், திருவண்ணாமலை **பகவான் ஸ்ரீ ரமணமகரிஷி** அவர்களாலும் தமிழில் ஞானசார விசாரப்படலம் என்ற பெயரில் 85 வெண்பாக்களாகப் பாடப்பட்டது. அவ்வாறு, பகவான் பாடிய 85 பாடல்கள் கொண்ட வெண்பாக்களை ஸ்ரீ ரமணாஸ்ரமம் வெளியிட்டது.

இந்த நூலின் பெயர் **தேவி, காலம்** மற்றும் **உத்தரம்** என்ற மூன்று வார்த்தைகளைக் கொண்டதாக '**தேவி காலோத்தரம்**' என்று பெயர் பெற்றது. உத்தரம் என்றால் **முடிந்த முடிவு** அல்லது **அறுதி உண்மை** என்று சம்ஸ்க்ருத மொழியில் பொருள் கொள்வதால், காலதேசத்திற்கு அப்பாற்பட்ட பரமனை பற்றிய உயரிய உண்மையை உரைக்கும் நூலாக இது உள்ளது.

உப - ஆகங்களில் ஒன்றான இந்த நூலைப் படிப்பதினால், பாமரனும் பரமனாகும் படியான உயரிய உன்னத ஞானத்தையும் உயர் வாழ்க்கையையும் உணர்ந்துக் கொள்ள முடியும்.

ஆன்மீக அறிவைப்பற்றிய அனைத்து ஆகம சாஸ்திரங்களின் சாரம் கொண்டது இந்த நூல். அத்துடன், முடிவில்லாத **பிறப்பு - இறப்பு** என்னும் சம்சாரத் துயரக்கடலில் கடுமையாகப் போராடி, மூழ்கி, எழும்பும் மனிதர்களை மீட்டு, விடுதலைக் கரைக்கு, விரைவாக அழைத்துச் செல்லக்கூடிய தோணி (படகு) போன்றது இந்த நூல். மேலும், இருட்டில் தடுமாறி, திகைத்து, வழி தெரியாமல் தவிக்கும் அறியாமை சாதகர்களுக்கு அறிவு ஒளியைக் காண்பிக்கும் அணையா தீபம் கொண்டு, அடைந்த வெளிச்சத்தில் உண்டான விவேகத்தின்மூலம், அளப்பரிய அமைதியையும், ஆனந்தத்தையும் அளிக்கும் உயர்ஞான உபதேசங்களாக இந்த நூல் அமைந்துள்ளது.

அனைத்து ஆத்ம சாதகர்களும் அரிதான இந்த நூலைக் கற்று நற்கதி அடைய வேண்டுமாய் அன்புடன் வேண்டுகிறேன்.

நன்றி!

என்றும் அன்புடன்,

**சுவாமி பிரபஞ்சநாதன்.**

# தேவி காலோத்தரம்

## பாயிரம்

**பரமன் தன் வாக்கால் பார்வதி தேவிக்கு**
**செவிபுகட்டுந் தேவி காலோத்தரமென்னும்**
**இந்நூலைக் கற்பவர்கள் கருத்தில் நின்று**
**தன்னையறியும் சர்வசாட்சி கேவலமானானே!**

பரமசிவன் தனது திருவாக்கினால், அன்னை பார்வதி தேவிக்கு செவிகளில் புகட்டியருளிய, இந்த தேவி காலோத்தரமென்ற நூலைக் கற்கின்றவர்கள் கருத்தினிலே, தன்னையறிகின்ற சர்வ சாட்சியாகவும், தனித்தவனாகவும் உள்ளார்கள்.

## பாடல்கள்

**ஸர்வேஷாமபி முக்த்யார்தம் முக்தி மார்கஸ்ய தர்சனம் |**
**தேவேசஜ்ஞானமாச்சரம் கிருபயா கதயஸ்வ மே ||** (1)

Sarveshāmapi muktyartham mukti mārgasya darsanam |
devesajnānamāchāram kripayā kathayasva me || (1)

**தேவி:** அனைத்துக்கும் ஆதாரமான நாயகனே! அகிலத்தில் உள்ள அனைத்து உயிர்களுக்கும் முக்தியை நல்கும் நாயகனே! உன்னதமான ஞானத்தின் உயர் பாதையையும், ஒழுக்க நெறிமுறையையும் அறிந்து கொள்ள ஆவலாக இருக்கிறேன். **'எதை அறிந்துக் கொண்டால் எல்லாம் அறிந்ததாகுமோ!'** அதைக் கற்றுக் கடைப்பிடிப்பதின் மூலம், சம்சாரத்திலிருந்து விடுதலை பெற முடியும் என்னும் வழிமுறையை அனைத்து சீவர்களிடத்திலும் தங்களுக்கு உள்ள கருணையினால், அருள்கூர்ந்து கற்றுத்தர வேண்டுகிறேன்.

**ஞானச்சாரௌ வராரோஹே கதயாமி தவதுனா |**
**ப்ரவிசந்தி யதோ மோக்ஷம் ஞானினோ த்வஸ்தா கல்மஷம் ||** (2)

Jnānāchārau varārohe kathayāmi tavādhunā |
bravisanti yato moksham jnānino dhvasta kalmasham | | (2)

**பரமசிவன்:** உத்தம குணத்தையுடைய உமையவளே! உன்னுடைய விருப்பத்தின்படி, எல்லோரும் அறிவைப் பெறுவதற்கான வழிமுறையை நான் உனக்குத் தெளிவாகக் கூறுகின்றேன். ஞானமும், ஞானச்சாரமும் கொண்ட இந்த வழியை பின்பற்றுபவர்கள் இறுதியில், எந்தக் கறைகளும் இல்லாத, வார்த்தைகளால் விவரிக்க முடியாத, உயரிய விசயத்தை உன்னை போன்ற ஆர்வமுள்ள விவேகிகள் (முமுக்ஷுக்கள்) விடுதலை பெறும் பொருட்டு கூறுகின்றேன்.

**யேஷாம் போதோ ந சஞ்ஜாதோ காலஜ்ஞானத்வாரணனே |**
**ந தேஷாம் ஜாயதே போதஹ் சாஸ்த்ரகோடிசதைரபி ||** (3)

Yeshām bodho Na sanjāto kālajnānādvarānane |
Na teshām jāyate bodhah sāstrakotisatairapi || (3)

அகத்தின் அழகு முகத்தில் தெரியும் என்பதுப் போன்று, அழகிய முகமுடைய பார்வதி தேவியே! மனதின் உயர் பக்குவ நிலையாகிய தன்னை அறியும் ஞானத்தின் மூலம், தனது இதயத்தில் உள்ள உண்மையை உணர முடியாதவர்கள், வானத்தைப்போல பரந்து விரிந்து கிடக்கும் எண்ணற்ற சாஸ்திரங்களை பரோக்ஷ ஞானமாக கோடிக்கணக்கில் கற்றாலும், ஒருநாளும் அவர்களுக்கு அபரோக்ஷ ஞானமாகிய தன் சொரூப ஞானம் உதிக்காதென்றே உணர்வாயாக.

**அதோஹி நிர்பயோவித்வந்நிஹ்ஸங்கோ விகதஸ்ப்ரிஹஹி |**
**ஞானோத்சியாஹபரோ பூயியாச்ச்ரத்ததனே நிரீஆகுலஹ்ன் ||** (4)

Atohi nirbhayovidvānnihsanko vigatasprihahi |
nānotsiāhaparo bhooyiāchchraddadhane niriākulahn || (4)

எனவே, இந்த வழியைப் பின்பற்றி, கேட்டல் என்ற சிரவணத்திலே ஆர்வமுள்ளவனாக இந்தக் காலோத்தர ஞானத்தினால்தான் முக்தி கிடைக்கும் என்ற உறுதியுள்ளவனாக, பயமின்றி, துளியும் சந்தேகம் கொள்ளாமல், பிறர் பொருட்களின் மீது ஆசை வைக்காமல், எந்தவித குழப்பமும் இல்லாமல், எல்லா சந்தேகங்களையும் நிவர்த்தி செய்துக் கொண்டு, எதிலும் பற்று வைக்காமல், வைராக்கியம் உடையவனாக புறச் சிந்தனைகள் ஏதுமற்ற, தெளிவான முழு மனதுடன் கூடிய நம்பிக்கையில் ஞானாப்யாஸம் செய்வதில் ஆர்வமுடன் இருப்பாயாக.

**நிர்மமா கருணோபேதாஹ் ஸர்வபூதாபயப்ரதா |**
**பஜேத்கலோத்தரம் தேவீ முமுக்ஷுர்யோகதத்பரஹ்** || (5)

Nirmamah karunopetah sarvabhootābhayapradah |
bhajetkālottaram Devi mumukshuryogatatparah || (5)

தன்னைத்தவிர **'நான்', 'எனது', 'என்னுடையது'** என்று எதுவும் இல்லாமல், கருணை கொண்ட மனதினால், அஹிம்சை முறையில் அனைத்து உயிரினங்களிடத்திலும் சீவகாருண்யம் கொண்டு, அவைகளை அரவணைத்து, அஞ்சாத வகையில், அவைகளிடத்தினில் அன்பு கொண்டு, அபயம் அளித்து, தன்னுடைய விடுதலைக்காக ஏங்கி, ஒன்றேயாகிய பிரபஞ்ச சுயத்துடன் தன்னுடைய தனிப்பட்ட சுயம் இணையும் வகையில் யோகத்தில் மனம் ஒன்றியவனாய் இந்த **'தேவி காலோத்தரம்'** கூறுகின்ற ஒற்றைப் பாதையை ஒருமுகமாக, முழு மனதுடன் உறுதியாகப் பின்பற்ற வேண்டும்.

**ச ப்ரஹ்மா ச சிவோ விஷ்ணுஹ் ச இந்த்ரஹ் ச ஷடானனஹ் |**
**ச குருஹ் ஸர்வதேவாநாம் ச யோகீ ச தபோதனாஹ்** || (6)

Sa brahmā sa sivo vishnuh sa indrah sa shadānanah |
Sa guruh sarvadevānām sa yogee sa tapodhanah || (6)

**பண்டிதஹ் ச மஹாபாகஹ் கிருதார்தஹ் பரமார்த்ததா |**
**சலத்வாயு ஸமம் சித்தம் த்ரியதே. யேன நிச்சலம்** || (7)

Panditah Sa mahābhāgah kritārtah paramārtatah |
chaladvāyu samam chittam dhriyate. Yena nischalam || (7)

சுழல் காற்றைப்போல இங்கும், அங்கும் அலைப் பாய்ந்துக் கொண்டு இருக்கின்ற அமைதியற்ற, கொந்தளிப்பான தன் மனதைக் கட்டுக்குள் கொண்டு வந்து, அமைதியான நிலையில் மனதைப் பராமரிக்கக் கூடியவனாக இருக்கின்றானோ, அவனது மகிமையைக் கூறவும் முடியுமோ? அவ்வாறு, பரம வைராக்கியத்தின் வாயிலாக தன் மனதை ஒருவர் விவரித்தால், அவர் அடைந்த விவேகத்தின் வாயிலாக, அவர்தான் உண்மையிலேயே பிரம்மா (படைப்பைச் செய்யும் கடவுள்), சிவன் (மீட்பவர் - முக்திக்கான பாதையைக் காட்டுபவர்), மற்றும் விஷ்ணு (உலகைப் பேணுபவர்) என எல்லாமாக தானே இருப்பதை உணர்ந்துக் கொள்ள முடியும்.

மேலும், தேவர்களின் அதிபதியாகிய இந்திரனும், தேவசேனாபதியாகிய சுப்பிரமணியனும் அவனே ஆவான். அத்துடன், சகல தேவர்களின் குருவாகிய பிருகஸ்பதியும், எல்லாத் தவங்களையும் செய்து, அவைகளில் சித்தி பெற்றவனாகவும், அனைத்து வேத, வேதாந்த சாஸ்திரங்களைக் கற்றறிந்த மகாபண்டிதனும், மகாத்மாவாகிய பாரமார்த்தப் பேறு என்னும் உண்மை ஞானத்தைப் பெற்றவனும் அவனே ஆவான்.

**ச உபயோ விமோக்ஷஸ்ய சதுபியத்தகுணஸ்துதஹ் |**
**ஸ ப்ரஜ்ஞாதாதிஹஸ்தைர்யம் தத்புண்யம் வ்யவஸாயினம் ||** (8)

Sa upāyo vimokshasya sadupiāttagunastutah |
sa prajnatadihasthairyam tatpunyam vyavasayinam || (8)

**ததேவ தீர்த்தம் தானம் ச தத்தபஸஷ்ச ந சம்சயா |**
**யேனோபாயேன பத்யேத வாயுவச்சலிதம் மனஹ் ||** (9)

Tadeva teertham dānam cha tattapascha Na samsayah |
yenopāyena badhyeta vāyuvachchalitam manah || (9)

காற்றை விட வேகமாக அசையும் இந்த மனதைக் கட்டுக்குள் கொண்டு வர வேண்டுமானால், சம்ஸார பந்தத்திலிருந்து உண்மையில் விடுதலையைப்

பெற வேண்டுமானால், அதற்கான ஒரே ஒரு வழிமுறை ஒன்று உள்ளது. அது, தன் மனதைத் தானே விசாரித்து, அதில் எழும் விபரீத அறியாமை எண்ணங்களை அகற்றி, சத்வஸ்துவை நாடும் விவேகத்தினால் உண்டான யதார்த்தத்தை, நடு நிலையாக நாடுபவர்களுக்கு நன்மைகள் தானாகவே வந்து சேரும்.

இதுவே உண்மையில் தூய உணர்வு மற்றும் உறுதியான நிலை. மேலும், இது மட்டுமே விவேகிகள் அடையக்கூடிய அருமையான வழிமுறையாகும். இவ்வாறு நிக்ஷலமான மனதினால், உண்டான அகத் தூய்மை ஒன்றே அனைத்து, புனித நதிகளில் நீராடுகின்ற பாவங்களைக் கழுவும் புனித நீருக்கான யாத்திரை. இது மட்டுமே தொண்டு. இது மட்டுமே துறவறம். இதில் எந்த சந்தேகமும் இல்லாமல் இயன்றவரை மன அமைதியுடன் இருக்கும் உண்மையான மார்க்கம் இதுவே ஆகும்.

**சித்தேசலதி சம்ஸாரோ நிச்சலே மோக்ஷ ஏவடு |**
**தஸ்மாத்சித்தம்ஸ்த்திரம்குர்யாத்ப்ரஜ்ஞயாபராயபுதஹ் ||** (10)

Chittechalati samsāro nischale moksha evatut |
tasmātchittamsthiramkuryātprajnayāparayābudhah || (10)

மனம் சிறிது அசைந்தாலும், அதுவே சம்சாரம் என்கின்ற பிறப்பு - இறப்பு உண்டாவதற்கு காரணமாகின்றது. மனம் சலனமடையாமல் தன்னில் தானாய் தன் சொரூபத்தில் நிற்குமானால், அதுவே முக்தியாகும். இதுவே சர்வ நிச்சயம் கொண்ட, மறுக்க முடியாத, உறுதியான உண்மையாகும். ஆகவே, புத்திசாலியான விவேகி மட்டுமே மனதை எப்போதும் பரவஸ்துவைப் பற்றியவனாக, தன்னுடைய மேலான பிரஞ்ஞையில் திளைத்திருப்பான். அவனே ஞானி. ஆகவே, மனம் எப்போதும் தன் சுய பிரஞ்ஞையில் இருந்து நழுவாமல் இருக்க, அதை உறுதியாக வைத்திருக்க வேண்டும் என்பதை அறிந்துக்கொள்.

**ஏகாந்திகம் சுகம் யத்ர ததைவாத்யந்திகம் பவேத் |**
**நிஷ்கர்மணி பரே தத்த்வே கோ ந ரஞ்சதி பண்டிதஹ் ||** (11)

Ekāntikam sukham yatra tathaivātyantikam bhavet |
nishkarmani pare tattve Ko na ranjati panditah || (11)

ஏற்றி வைத்துக்கொண்ட ஏராளமான புற அறிவுகளை தன்னுடையதாகக் கருதாமல், உண்மை போலத் தோன்றும் இந்த உலகம் அந்த அக அறிவின்மீது ஏற்றி வைக்கப்பட்டுள்ளது என்பது புரிந்தால், அத்தகைய சனலமற்ற மனதினால், அந்த அறிவுடன் தன்னில் தானாய் தனிமையில் இருக்கும் மகிழ்ச்சியே மிக உயர்ந்த, எல்லையற்ற, அழிவற்ற ஆனந்தம் ஆகும். அங்கு எந்தவித தியானமும், நிதித்யாஸனமும் தேவையில்லை.

ஆகவே, பரவித்தையை நன்கு கற்றுத்தேர்ந்த விவேகியான ஒருவன் மட்டுமே, அந்த பரவஸ்துவில், அதன் உன்னத யதார்த்தத்தில், தன் உண்மை சொரூபத்தின் மகிழ்ச்சியில் திளைத்திருப்பான்.

**நிவ்ரித்தோ விஷயஜ்ஞாத் நிஷ்கலா ஜ்ஞாத்னதத்பரஹ் |**
**அனிச்சன்னபி மேதாவீ லபதே மோக்ஷமக்ஷயம் ||** (12)

Nivritto vishyajnānāt nishkala jnādnatatparah |
anichchannapi medhāvee labhate mokshamakshayam || (12)

ஏற்றி வைத்துக்கொண்ட ஏராளமான உலக அறிவிலிருந்து விடுபட்டு, எங்கும் விரிந்து வியாபகமாயுள்ள, உருவமற்றதான நிர்விஷய ஞானத்தை அடைந்த சிரேஷ்டனானவன், மோட்சத்தை அடைய வேண்டுமென்ற விருப்பமும் இல்லாமல் இருப்பினும், அந்த தீரனாகிய ஞானபரன் அழிவற்றதான மோட்ச வீட்டைத் தவறாமல் தானாகவே அடைந்திடுவான்.

**அஸ்மிதாகாலயயுக்தம் சைதன்யம் சக்திருச்யதே |**
**தயா ப்ரகாசிதம் விஸ்வம் சக்தித்யானமுதாஹ்ரிதம் |**
**ஸர்வாலாம்பா விநிர்முக்தம் நிஷ்கலஜ்ஞாநமுச்யதே ||** (13)

Asmitākalayāyuktam chaitanyam saktiruchyate |
tayā prakāsitam visvam saktidhyānamudāhritam |
sarvālamba vinirmuktam nishkalajnānamuchyate || (13)

**'அஹம்'** என்ற அம்சத்துடன் **"நான் இருக்கின்றேன்"** என்று, உணர்வு மாத்திரமாக உள்ள ஒரே அம்சத்துடன் கூடிய சைதன்யம் **சக்தி** எனப்படும். அந்த சக்தியின் அம்சத்தினால்தான் இந்த பிரபஞ்சம் பிரகாசிக்கிறது. இந்த முழு படைப்பும் அந்த சக்தியின் சங்கல்பங்களே (சிந்தனைகள்) ஆகும். அத்தகைய சங்கல்ப எண்ணங்ளைக் கொண்ட மனம் சகல பற்றுக்களையும் விட்டு, அந்த ஒன்றேயாகிய ஏக அறிவு நிலையில் நிஷ்களமாய் நின்று விட்டால், அங்கு தன் செயலாவது ஏதுமில்லை எல்லாம் அந்த அறிவின் வெளிப்பாடு என்பதை அறிந்துக் கொள்வதே **ஞானம்** எனப்படும்.

**அஹமம்ஸேன யச்சூன்யம் சின்மாத்ரலோகமத்வயம் |**
**முக்திபீஜம் ததாக்யாதம் பரயோகப்ரவர்தகம் ||** (14)

Ahamamsena yachchoonyam chinmātrālokamadvayam |
muktibeejam tadākhyātam parayogapravartakam || (14)

கால, தேசங்களற்ற, இரண்டற்ற ஏக சொருபமாக இருக்கின்ற அந்த சுத்த அறிவு, '**நான்**' என்ற தன்னுடைய சுய உணர்வாகிய ஸ்புரணத்தின் மூலம், காணக்கூடிய காட்சிகள் எல்லாம் தன்னுடைய இருப்பினாலேயே இருக்கின்றது என்பதை உணர்ந்து உய்யும்போது, அத்தகைய அனைத்து அம்சங்களும் அறிவின்மீது ஏற்றி வைக்கப்பட்டுள்ளது என்று அறிந்து, அவைகளினால் ஆட்கொள்ளப்படாத சூன்ய நிலை எதுவோ? அதுவே பரம மோக்ஷத்தை விளைவிக்கும் விதையாகும்.

**சக்ரானி நாதயஹ் பத்மதேவதாபீஜமண்டலம் |**
**ரூபமித்யதாயிகம் கிஞ்சித் த்யேயம் நைவ கதாசன ||** (15)

Chakrāni nādayah padmadevatābeejamandalam |
roopamitydāikam kinchit dhyeyam naiva kadāchana || (15)

இந்த நேரடிப் பாதையைப் பின்பற்றுவதற்குப் பதிலாக, தாமரை இருக்கைகளுடன் தொடர்புடைய **'ஷடாதாரங்கள்'** (ஆறு ஆதாரங்கள்) என்று பிரசித்தமாகக் கூறப்படும், அந்த ஆறு சக்கரங்களில் விளங்கும், தசவித நாதங்களை உண்டாக்கும் நாடிகள், ஆதார சக்கரங்களின் மத்தியிலுள்ள,

பலவித இதழ்களுடன் கூடிய தாமரைகளில் வீற்றிருக்கும், வினாயகர் முதலான தேவதைகள், மற்றும் அவற்றிற்கான மந்திர அட்சரங்கள், சூரிய மண்டலம், சந்திர மண்டலம், அக்னி மண்டலம் எனப்படும் மும்மண்டலங்கள் என எல்லாவற்றிற்கும், பலவிதமாக விரிந்த மூர்த்தி பேதங்கள் போன்ற இவைகளில் நாட்டம் இருக்குமானால், அவன் அந்த அகண்ட அறிவை தன்மயம் ஆக்க முடியாது. ஆகவே, நேர்வழியாகிய காலோத்தர மார்க்கத்தை விட்டுவிட்டு, மற்ற மார்க்கங்களில் பயணித்தல் பயனற்றது என்று அறிவாயாக.

**கும்பகம் மனத்ரஜாலம் ச பிராணயாமாதி தர்ணம் |**
**ஸர்வமேதன்ன கர்தவ்யம் மோக்ஷமக்ஷயமிச்சதா ||** (16)

Kumbhakam manatrajālam cha prāṇāyāmādi dhārnām |
sarvametanna kartavyam mokshamakshayamichchatā || (16)

நித்திய விடுதலையை நாடுபவர்கள், திரும்பத் திரும்பக் கூறியும், என் அறிவுரையைக் கேட்காமல், எண்ணற்ற பலவிதமான மந்திரங்களையும், உயிரின் சலனத்தைக் கட்டுப்படுத்தும் கும்பகம், இரேசகம் போன்ற கடினமான மூச்சுப் பயிற்சிகள் செய்வதும், அத்துடன் தாரணை பழகுவதும் போன்ற புறக் காரியங்களால், அந்த அழிவற்ற ஆத்மாவை உணரும் முக்தி நிலைக்கு அவனை அழைத்துச் செல்லாது என்பதை அறிய வேண்டும்.

**நாத்ரபூஜா நமஸ்காரோ ந ஜபோத்யானமேவ ச |**
**கேவலம் ஜ்ஞேயமித்யுக்தம் வேதிதவ்யம் ந கிஞ்சன ||** (17)

Nātrapooja namaskāro Na japodhyānameva cha |
kevalam jneyamityuktam veditavyam Na kinchana || (17)

நான் சொல்வதைச் சற்று கவனத்துடன் கேட்பாயாக!, வேதங்களால் போற்றப்படும் புகழ்பெற்ற பரவஸ்துவானது, தனித்து தன்னில் தானாய் '**கேவலம்**' என்பதாக இருக்கின்றது. அதை ஞானத்தினால் மட்டுமே அறியத் தகுமென அறிவாய். ஆகையினால், அந்தப் பரவஸ்துவைக் குறித்துச் செய்யப்படும் மூர்த்தி தியானங்களோ, பூஜைகளோ, போற்றித் துதித்து வணங்குதலோ தேவையில்லை.

அத்துடன், புனிதமான பஞ்சாட்சர, அஷ்டாக்ஷர நாமத்தை இடைவிடாது ஜெபம் செய்வதோ, தேவதாமூர்த்திகளை உள்ளத்தில் தியானிப்பதோ முதலான எதுவுமே அந்தவிடத்தில் இல்லை. வேதங்களில் போற்றப்படும் உயர்ந்த உண்மையை, ஞானத்தின் மூலம் மட்டுமே அறிய முடியும் என்பதை அறிந்து, தனக்கு வெளியே எதையும் தெரிந்து கொள்ள வேண்டிய அவசியம் இல்லை என அறிவதே, அந்த இயல்பான பரவஸ்துவை தன்னிருப்பில் உணர்வதாகும்.

**பஹிராஹிதா சித்தானாம் ஜாயந்தே பந்தஹேதவா |**
**பஹிச்சித்தம் நிவர்யைவ கோ'பி லோகேன ஸீததி ||** (18)

Bahirāhita chittānām jayante bandhahetavah |
bahischittam nivāryaiva ko'pi lokena seedati || (18)

தனக்கு அன்னியமான வெளிப் பொருட்களைப் பற்றிக்கொண்ட மனம் தொடர்ந்து விரிவடைந்துக் கொண்டே இருக்கும். அதன்காரணமாக, அவைகளில் பந்தத்தை உண்டாக்கிக் கொண்டே இருக்கும். அவ்வாறு வெளியில் அலைந்து திரியும் மனதை உள்நோக்கித் திருப்பி, தனதியல்பான உண்மை நிலையில் நிற்கச் செய்தால், இந்த உலகில் எந்தத் துன்பமும் அவனை நெருங்காது என்பதை அறிந்து கொள்.

**நாத்ரகிஞ்சித்பஹிர்னாந்தஹ் ந மத்யம் நாப்யதஹ் க்வசித் |**
**ஸர்வாகரம் நிராகாரம் ஸ்வஸம்வேத்யம் விரஜதே ||** (19)

Nātrakinchidbahirnāntah Na madhyam nāpyadhah kvachit |
sarvākāram nirākāram svasamvedyam virājate || (19)

உள்ளே, வெளியே, மேலே, கீழே மற்றும் இடையில், என எல்லா (கருத்தின்) திசைகளில் இருந்தும் தோன்றும் வடிவங்கள் பல இருந்தாலும் தனக்கென எந்த வடிவமும் இல்லாத, எங்கும் நிறைந்த பரிபூரண ஏகாத்ம சொரூபமானது தன்னாலேயே தன்னை அறியக்கூடியதாய், மற்றொன்றின் பிரகாசத்தை விரும்பாமற் தன்னைத் தானே சுயம் பிரகசமாய் பிரகாசித்துக் கொள்ளுகிறது. அப்படிப்பட்ட அந்த உண்மையான (பரிபூரண) ஏகாத்ம சொரூபத்தைச் சேர்வாயாக.

**யத்யதாலோக்ய யோ ஜந்துஹ் குருதே கர்ம சஞ்சயம் |**
**தத்கதிர்ஜாயதே யஸ்மான்னிராலோகம் து சிந்தயேதி ||** (20)

Yadyadālokya yo jantuh kurute karma sanchayam |
tadgatirjāyate yasmānnirālokam tu chintayeti || (20)

மக்கள் தங்கள் சொந்த நோக்கங்களை மனதில் கொண்டு தங்கள் செயல்களைச் செய்கிறார்கள், அதற்கேற்ப அவர்கள் அந்த நோக்கங்களை அடைவதன்மூலம், தங்களின் செயல் விளைவுகளை அறுவடை செய்கிறார்கள். எனவே, குற்றங்கள் உள்ள செயல்களைச் செய்யாமல், தனக்கு வேறான புற விசயங்களில் நாட்டம் வைக்காமல், மனதை உள்முகமாக்கி, தன் சுயத்தின் மீது மட்டுமே கவனத்தை வையுங்கள்.

**ஹேதுர்நாஸ்தி பலம் நாஸ்தி நாஸ்தி கர்ம ஸ்வபாவதா |**
**அஸத்பூதமிதம் ஸர்வம் நாஸ்தி லோகோ ந லௌகிகஹ் ||** (21)

Heturnāsti phalam nāsti nāsti karma svabhāvatah |
asadbhootamidam sarvam nāsti loko Na laukikah || (21)

நமது இயற்கையான நிலையில் இருக்கும்போது, செயல் விளைவுகளின் காரணங்கள் என ஏதுவுமே இருப்பதில்லை. இருப்பதாகக் கூறப்படுகின்ற இவைகளெல்லாமே உண்மையில் இல்லை. அதாவது, பலவாறாகக்காணப்படும் இந்த உலகமும் உண்மையில் இல்லை. அப்படியிருக்க இதிலே, சீவனாக தன்னைப் பாவித்துக்கொண்டு, செயல்விளைவுகளுக்கு தன்னை **கர்த்தா** என்று கூறிக்கொள்கின்ற லௌகீக வாழ்க்கை வாழ்பவனும் உண்மையில் இல்லவே இல்லை. அனைத்துமே இல்லை என்பதை அறிவாயாக.

**நிராலம்பமிதம் ஸர்வம் நிராலம்பப்பிரகாசம் |**
**நிராலம்பமிதம் கிருத்வா நிரலம்போ பவிஷ்யதி ||** (22)

Nirālambamidam sarvam nirālambaprakāsitam |
nirālambamidam kritvā nirālambo bhavishyati || (22)

இந்த மொத்த பிரபஞ்சமும் எந்த ஆதரவும் இல்லாமல் இருப்பதுப் போல இருப்பினும், இவைகள் எல்லாவற்றிற்கும் ஆதாரமாக அந்த பரமனே இருக்கிறான். அவனது இருப்பினாலேயே இந்த பிரபஞ்சம் பிரகாசிக்கின்றது. ஆகவே, மனதை உள்முகமாகத் திருப்பிய யோகியானவன், இந்த உலகிலுள்ள அனைத்தும், அந்தப் பரம்பொருளின் மயமாகவே ஒன்றாக்குவதன் மூலம் அந்த முழுமையோடு அவனும் ஒன்றிவிடுகிறான். அதாவது, அந்தப் பரவஸ்துவின் மயமாகவே ஆகி விடுகிறான் என்று அறிவாயாக.

**வ்யோமாகாரம் மஹாசூன்யம் வ்யாபகம் யோ ந பாவயேத் |**
**ஸம்ஸாரீ ச பாவெல்லோகே பீஜகோசக்ரீமிர்யத ||** (23)

Vyomākāram mahāsoonyam vyāpakam yo Na bhāvayet |
samsāree sa bhavelloke beejakosakrimiryatha || (23)

எங்கும் நிறைந்திருக்கும் வெற்றிடமாகிய உணர்வு வெளியில், தன்னை சிதாகாச சொரூபமாகவும், எங்கும், எதிலும் வியாபித்து நீக்கமற நிறைந்துள்ள, மகத்தாகிய சூன்யத்தையும், தன்னில் தானாய் தன் சொரூபத்தில் உணராமல், ஒரு பட்டுப் புழுவைப் போல, தன்னை சிறைப்படுத்திக் கொண்டவன் உலகப் பற்றுகளுக்கு அடிமையாகி, என்றென்றும் சம்சாரியாக இருப்பான் என்பதை அறிவாயாக.

**ஸர்வயோநிஷு ஸர்வஸ்ய மஹத்க்லேசம் புனஹ் புனஹ் |** (24)
**ஸர்வக்லேசம் பரித்யக்தும் மஹாசூன்யம் விசிந்தயேத் ||**

Sarvayonishu sarvasya mahatklesam punah punah |
sarvaklesam parityaktum mahāsoonyam vichintayet || (24)

படைக்கப்பட்ட சிருஷ்டியில் தோன்றும் எண்பத்து நான்கு இலக்ஷம் பேதம் உடைய, எல்லா யோனிகளிலிருந்தும், உற்பத்தியாகின்ற அனைத்தும் இந்த உலகத்தில் மேலும், மேலும் மிகுந்த துயரத்தையே அடைகின்றன.

அதற்குக்காரணம், அவைகளிடமுள்ள அறியாமை என்பதை அறிந்துக் கொண்டவன் மட்டுமே, அத்தகைய அறியாமையிலிருந்து விடுபட

விரும்புகின்றான். அவனுக்கான அரிய ஒரு இரகசியத்தை உரைக்கின்றேன் கேட்பாயாக. அதாவது, அறியாமைகள் அகன்று, அனைத்து துயரங்களும் நீங்க வேண்டுமானால், மகத்தாகிய அந்தச் சூன்யத்தை (வெட்டவெளி) எப்பொழுதும் இடைவிடாமல் சிந்தனை செய்வாயாக.

**ஞானோத்பத்தி நிமித்தம் து க்ரியா சார்யா ப்ரகீர்த்திதா |**
**யோகம் சலம்பனம் த்யக்த்வா நிஷ்ப்ரபஞ்சம் விசிந்தயேத் ||** (25)

Jnānotpatti nimittam tu kriyā charyāh prakeertitāh |
yogam sālambanam tyaktvā nishprapancham vichintayet || (25)

நல்ல செயல்களும் நன்னடத்தைகளும் அறிவைப் பெறுவதற்கான பாதையில் பயணிப்பவர்களுக்காகப் பரிந்துரைக்கப்படுகின்றது. அவ்வாறு, பயணித்து ஞானத்தை அடைந்த ஞானிக்கு அவைகள் இனி அவசியம் இல்லை. ஆகவே, ஒரு பொருளை (மந்திரம் அல்லது கடவுளின் வடிவம் போன்றவை) மனதில் தியானிக்கும் சாலம்பன யோகத்தையும் விட்டுவிட்டு, வெளி உலகம் உணரப்படாத, உன்னுடைய உண்மை சொரூபத்தில் உறுதியாக இருப்பாயாக.

**பாதாலச்சக்திபர்யந்தம் ஸர்வமேததாபீப்சிதம் |**
**பக்னம் யயிஹ் சூன்யமஸ்த்ரேண தேஸ்மரிதாஹ் சூன்யவேதினாஹ் ||** (26)

Patalachchaktiparyantam sarvametadabheepsitam |
bhagnam yaih soonyamastrena tesmritah soonyavedinah || (26)

பாதாளலோகம் முதல் மேல் உலகம் வரை உள்ள ஈரேழு பதினான்கு லோகங்கள் என்பவைகள் எல்லாம், உண்மையில் மனதின் கற்பனா சக்தி என்று அறிந்துக்கொண்டு, சூன்யம் என்ற அஸ்திரத்தைக் கொண்டு, அழிக்கக் கூடியவனே உண்மையில் ஒரு சிறந்த சூரன் ஆவான். அத்தகைய சூரனே சூனிய ஞானமாகிய நிர்விஷய ஞானியென்று அறிந்து கொள்வாய்.

**விஷயேலோழுபம். சித்தம் மார்கடதாபி சஞ்சலம் |**
**ஸர்வஸூந்யபதே ஸ்தித்வா ததோ நிர்வாணமேஷ்யதி ||** (27)

Vishayelolupam. Chittam markatādapi chanchalam |
Sarvasoonyapade sthitvā tato nirvānameshyati || (27)

உலக, சுகபோகங்களின் மீது, ஆசைகளைக் கொண்டு, அதற்காக ஏங்கும் மனம் ஒழிந்து போகாமல், திரும்பத்திரும்ப அந்த ஆசைகளையே நினைத்துக் கொண்டிருக்குமானால், அது குரங்கைக் காட்டிலும் அதிகமாக சதா சலித்துக் கொண்டிருக்கும் மனமாக மாறி, வெளி விஷயங்களைப்பற்றிக் கொள்ளும். அவ்வாறு, அந்த மனதை அதன் போக்கில் திரிய விடாமல் உள்முகமாகத் திருப்பி, சர்வ சூனியமாகிய வெட்டவெளியின் பதத்தில் ஸ்தாபித்து நிலைபெறச் செய்திடுவாய். அப்படி ஸ்தாபிக்கச் செய்வதால், அவன் மனமற்ற நிலையில், அந்த அறிவின் சாட்சாத்காரத்தில் முக்தி பதத்தை அடைகிறான்.

**ஸர்வதத்த்வாதஸம்பின்னம் தேஹாத்பின்னம் ததைவ ச |**
**அஹமஸ்மீத்யஸம்பின்னம் சைதன்யம் ஸர்வதோமுகம் ||** (28)

Sarvatattvādasambhinnam dehādbhinnam tathaiva cha |
ahamasmeetyasambhinnam chaitanyam sarvatomukham || (28)

படைக்கப்பட்ட அனைத்திலும், வேறாக இல்லாமல், இரண்டறக் கலந்து நிற்கின்ற முழு உணர்வின் (பூரண சித்தின்) உண்மைத் தன்மையை உணர்ந்துக் கொண்டவன், தேகமே நானென்ற தேகாத்ம பாவனையை நீக்கி, அந்த அகங்காரத்திற்கு அன்னியமாய், **'நான்'** என்னும் உண்மைப் பொருளுக்கு உரித்தான, அந்த பரிபூரண சித்சொரூபமாகிய சைதன்யமே சகலமும் என அறியும் ஞானமே உண்மையான ஞானம்.

**ஆகாசமிவஸர்வம் து ச பாஹ்யாப்யந்தரம் ப்ரியே |**
**பரானந்தமரூபந்து பச்யன்னாநந்தபாக்பவேத் ||** (29)

ākāsamivasarvam tu sa bāhyābhyantaram priye |
parānandamaroopantu pasyannānandabhāgbhavet || (29)

எனக்குப் பிரயமானவளே! எங்கும், எதிலும் நிறைந்துள்ள வெட்ட வெளியைப்போன்று, உள்ளேயும் வெளியேயும் வியாபித்து, அவற்றுடன்

ஒன்றிணைந்து உருவமற்ற, ஆனந்த மயமான அந்த வஸ்துவினுள்ளே ஆழ்ந்து இருப்பவர் அப்பரமானந்த வடிவமேயாவார். (ஆனந்தமே உருவமான முனிஸ்ரேஷ்டராவார்) ஆஹா! இது என்ன அற்புதம் பார்!

**நிரிந்தனோ யதா வஹ்னிஹ் ஸ்வயமேவ ப்ரஸாம்யதி |**
**க்ராஹ்யாபாவான்மனஸ்தத்வாத் ஸ்வயமேவ ப்ரலீயதே ||** (30)

Nirindhano yatha vahnih svayameva prasāamyati |
grāhyābhāvānmanastadvat svayameva praleeyate || (30)

எரிப்பதற்கான எரிபொருளைக் கொடுக்கா விட்டால், அந்த நெருப்பு படிப்படியாக அணைந்து விடுவதைப்போல, மனம் பற்றுவதற்கு விசய, சுகங்கள் ஒன்றுமில்லாவிட்டால், அத்தகைய விசயங்களால் விரிவடையும் மனம் தானாகவே அமைதியை அடையும்.

**மோஹிகா மூர்ச்சிகா மாயா ஸ்வப்னசேதி சதுர்விதம் |**
**சுஷுப்திர்ஜாக்ரதிஷ்சைவ ஸர்வமேதத்பரித்யஜேத் ||** (31)

Mohikā moorchikā māyā svapnascheti chaturvidham |
sushuptirjāgratischaiva sarvametatparityajet || (31)

ஆசையினால் ஒரு பொருளைக் கண்டு மோகமடைதல், அவ்வாறு, மோகமடைந்த அந்த பொருளின் மீதுள்ள வேட்கையினால் மயங்குதல், அது தனக்குக் கிடைக்கவில்லை என்ற அதிர்ச்சியினால் மூர்ச்சையடைதல், அது தனக்கு கிடைத்தே ஆக வேண்டும் என்று கனவு காணுதல் ஆகிய இந்த நான்குவித அவஸ்தைகளையும், ஒருவன் நன்கு உணர்ந்துக் கொண்டால், எதுவுமே தெரியாமல் ஒரே இருளாக இருக்கும் தூக்கத்தையும், எல்லாம் தெரிகின்ற விழிப்பு நிலையையும், வேறு வேறாகக் கருதப்படும் இந்த எல்லா அவஸ்தைகளையும் இரண்டற ஒழித்துவிட வேண்டுமென்று உணர்வாயாக.

**தேஹாத்ஸூக்ஷ்மகதாத்ப்ராணாத் சித்தத்புத்தேரஹங்க்ரிதே |**
**சர்வஸ்மாத்பின்ன ஏவாயாம் சிந்தயான்லபதே சிதிம் ||** (32)

Dehātsookshmagatātprāṇāt chittādbuddherahankriteh |
sarvasmādbhinna evāyam chintayanlabhate chitim || (32)

புறக்கரணங்களாகிய ஐம்புலன்கள் கொண்ட ஸ்தூல உடல், பிராணன், மனம் மற்றும் அந்தக்கரணங்கள் அனைத்தும் கொண்ட சூக்ஷும உடல் ஆகிய இந்த இரண்டிற்கும் ஏக சொரூபமாக பிரகாசிக்கும் தூய அறிவானது (சித்) ஒன்றே எனும், உணர்வில் மட்டுமே ஒருவன் நிலைப்பெற வேண்டும்.

**சதாபிபூயதேசித்தம் நித்ரயாஸ்மரணாதினா |**
**போதயித்வா ப்ரயத்னேன குர்யாத்ஸ்வஸ்தம் புனஹ் புனஹ் ||** (33)

Sadābhibhooyatechittam nidrayāsmaranādinā |
bodhayitvā prayatnena kuryātsvastham punah punah || (33)

உறக்கத்தில் வரும் கனவுகளினாலும், நினைவில் வரும் பலவிதமான எண்ணங்களாலும் மனம் எப்பொழுதும், எதையாவதை சிந்தனை செய்தவாறு, மூடத்தனம் அதிகரித்து, அறியாமையில் சிக்கிக்கொண்டு, விவேகத்தை இழந்து, அழிவுக்குச் செல்கிறது. இந்த மனதை பக்குவப் படுத்துகின்ற பரமனின் ப்ரஹ்மஞான விசயங்களை விருத்தி ஞானமாகக் கொடுத்து, அதன் போக்கில் அலைய விடாமல், அது, தன் சுய சொரூபத்தை அறிந்து, அதிலேயே நிலைப் பெறச் செய்ய வேண்டும். அவ்வாறு மனதை அதன் இயல்பில் இருக்க வைத்து, மீண்டும், மீண்டும் பழக்கினால், அந்த விடா முயற்சியில் விளைவாக, இந்த மனம் தன் உண்மை சொரூபத்திற்கு திரும்பிவிடும்.

**யதாஸ்திரம் பவேச்சித்தம் நைவ சால்யம் கதாஞ்சன |**
**ந கிஞ்சிச்சிந்தயேத்தத்ர ஸ்திரமேவது காரயேத் ||** (34)

Yadāsthiram bhavechchittam naiva chālyam kathanchana |
na kinchichchintayettatra sthiramevatu kārayet || (34)

மனம் ஒருமுறை தன் சுயத்தில் இருந்து, அதிலேயே நிலைப்பெற்று, அதன் இயல்பில் இருக்கப் பழகிவிட்டால், அதை எந்த விதத்திலும்

தொந்தரவு செய்யக்கூடாது. அனாவசியமான செயல்களில் ஈடுபட்டு, அதன் வாயிலாக சந்தேகத்தை அடையுமாகில், அதற்கான முயற்சியில் மீண்டும் மனதை செலுத்தி, வேறெதையும் சிந்திக்க வைக்க வேண்டிய அவசியம் இல்லை. தான் உதித்த இடத்தில் அதனை ஒடுக்கி, தன் உற்பத்தி ஸ்தானமான ஆத்ம சொரூபத்திலேயே மனதை நிலை நிறுத்தி, நிக்ஷலமாக இருக்கும்படி செய்வாயாக.

**ஆஸ்ரயாலம்பனம் சித்தம் தத்வத்குர்யான்நிராஸ்ரயம் |**
**சஞ்சலம் நிச்சலம் கிருத்வா நிச்சலம் ந து சாலயேத் ||** (35)

āsrāyālambanam chittam tadvatkuryannirāsrayam |
chanchalam nischalam kritvā nischalam na tu chālayet || (35)

எப்பொழுதும், ஏதாவது வெளி விசயங்களைப் பற்றிக் கொள்ள விரும்பும் மனதை, அத்தகைய புற விசயங்களில் நாட்டம் உண்டாகாதவாறு பழக்கி, உபயோகமற்ற ஆதரவில் (உணர்ந்த பொருள்களுடன் தன்னை இணைத்துக் கொள்ளும்) ஒட்டிக் கொண்டிருக்கும் மனதை, ஆதரவுகள் அற்றதாக ஆக்குங்கள். அவ்வாறு வெளிப்புற ஆதரவில் ஒட்டிக்கொண்டு, அற்ப ஆசைகளினால், அமைதியற்ற நிலைக்கு ஆட்படுகின்ற, அலைப்பாயும் மனதை, சலனமற்றதான அமைதி நிலையிலிருந்து ஒருபோதும் தொந்தரவு செய்யக்கூடாது.

**ஸர்வபூதலயேஜாதே யத்வத்வ்யோமஸுநிர்மலம் |**
**தத்வத்ரூபம் ஸ்வகம் த்யாயேத் வ்யாப்தம் சைவ ஸுநிர்மலம் ||** (36)

Sarvabhootalayejāte yadvadvyomasunirmalam |
tadvadroopam svakam dhyāyet vyāptam chaiva sunirmalam || (36)

ஐம்பூதங்களால் ஆன அனைத்துப் படைப்புகளிலும் வியாபித்திருக்கும் ஒன்றேயாகிய ஆகாயம் எவ்வாறு, எதனுடனும் ஒட்டாமல், மற்றவைகளினால் பாதிக்கப்படாமல், கறைபடாமல் இருக்கின்றதோ? அதுப்போல, பல்வேறு வடிவங்களில் வியாபித்திருக்கும், எந்தக் களங்கமும் இல்லாமல் (அவற்றால் பாதிக்கப்படாமல்) இருக்கும் ஒப்பற்ற தன் சுயத்தை (பரத்தை) தியானியுங்கள்.

**<u>குறிப்பு:-</u>**

**தியானம் என்பது சாட்சியிலிருந்து கவனிப்பது**
**தியானம் செய்தல் என்றாலே சாட்சியாதல் தான்**
**தியானம் என்பது வெறும் பயிற்சி உத்தி அல்ல**
**தியானம் என்பது புரிந்துக் கொள்ளும் நிலை.**

- பதஞ்சலி யோகசூத்திரம் [சாதன பாதம் 11]

**<u>விளக்கம்:-</u>**

தியானம் என்பது **நினைவு, கனவு, உறக்கம்** அதாவது, விழிப்பு நிலை (ஜாக்கிரதம்) கனவு நிலை (சொப்பனம்) உறக்க நிலை (சுசுப்தி) இதற்கெல்லாம் அப்பால் உள்ள உணர்வு நிலையாகிய சுத்த பரவெளி (pure conscious) மட்டும் உள்ள நிலையே **தியானம்** என்பதாகும்.

**ததேவ ஜன்மஸாஃபல்யம் பாண்டித்யமிதமேவாஹி |**
**சலத்வாயுசமம் சித்தம் நிச்சலம்த்ரியதேஹி யத்ர ||** (37)

Tadeva janmas**ā**phalyam p**ā**ndityamidamevahi |
chaladv**ā**yusamam chittam nischalamdhriyatehi yatr || (37)

காற்றைப்போல, எப்போதும் ஓயாமல் இங்கும், அங்கும் அலைகின்ற, அமைதியற்ற மனதை நிரந்தரமாக நிலைநிறுத்தும் சாதனம் என்பது எதுவோ? அதை விடாமல், விவேகத்துடன் பின்பற்றுவதினால், இந்த மனிதப் பிறவியின் நோக்கம் நிறைவேறும். அதுவே, உண்மையான அறிஞரின் அடையாளமும் ஆகும்.

**நைவோர்த்வம் தாரயேச்சித்தம் ந மத்யம் நாப்யதஹ் க்வச்சித் |**
**அந்தர்பாவாவிநிர்முக்தம் சதாகுர்யாந்நிராஸ்ரயம் ||** (38)

Naivordhvam dh**ā**rayechchittam Na madhyam n**ā**pyadhah kvachit |
antarbh**ā**vavinirmuktam sad**ā**kury**ā**nnir**ā**srayam || (38)

ஆறு ஆதார சக்கரங்களில், மேலே, கீழே அல்லது நடுவில் என எந்த ஸ்தானங்களிலும் மனதை தாரனை செய்ய வேண்டாம். அவ்வாறு உள்ளே செய்யும் தியானங்களையும் விட்டுவிட வேண்டும். அவ்வாறே, வெளியே எதாவது தெய்வீக மூர்த்தியை உபாசிக்கும் தியானம் செய்வதையும் விட்டுவிட வேண்டும். மனம் அகத்திலும், புறத்திலும், எந்த ஆதரவையும் பற்றாதவாறு தன்னில் தானாய் இருக்கும் தன் சுயத்தில் மட்டுமே இருக்க வேண்டும்.

**நித்ராயம் போதயேச்சித்தம் விக்ஷிப்தம் சமயேத்புனஹ் |**
**பக்ஷத்வய பரித்யாகோ ஸம்ப்ராப்தே நைவாச்சலயேத் ||** (39)

Nidrāyām bodhayechchittam vikshiptam samayetpunah |
paksadvaya parityāgo samprāpte naivachālayet || (39)

சொரூப நிஷ்டையில் இருக்கும்போது, மனம் உறங்கினால், அதை எழுப்புங்கள். எழுப்பும்போது, அது எண்ணங்களால் அலைய ஆரம்பித்தால், அதை அமைதிப்படுத்துங்கள். இவ்வாறு, மனதிற்கு உறக்கமோ, அசைவோ இல்லாத நிலை இருந்தால், அது, தன் இயற்கையான (உண்மையான) நிலையிலேயே இருக்கின்றது.

**நிராஸ்ரயம் ஸதாசித்தம் ஸர்வாலம்பனவர்ஜிதம் |**
**மனோவஸ்தா விநிர்முக்தம் விஜ்நேயம் முக்திலக்ஷணம் ||** (40)

Nirāsrayam sadāchittam sarvālambanavarjitam |
manovasthā vinirmuktam vijneyam muktilakshanam || (40)

மனம் உள் மற்றும் வெளிமுகமாக அலையாமல், எண்ணங்களுக்கு ஆதாரமானவற்றில் தங்குவதற்கு இடம் கொடுக்காமல், எந்தவிதமான ஆசைகளினாலும் அலைக்கழிக்கப்படாமல், தன்னிடம் உள்ள குற்றம், குறைகளை நாசமாக்கும்படி, பற்றுகள் அற்றதுமான ஆதரவின்றி இருக்கும் மன நிலையே, அறிவின் மூலம் அடையப்படும் விடுதலையின் இயல்பு. இதை மனதில் உறுதியாக வைத்துக் கொள்ளுங்கள்.

**ஸர்வலம்பநஸூன்யம் ச தாரயித்வா மனோஹ்ரிதி |**
**யத்ஞானம் ஜாயதே ஸ்பஷ்டம் ததப்யாஸபரோ பவேத்ர் ||** (41)

Sarvālambanasoonyam cha dhārayitvā manohridi |
yatgnānam jāyate spashtam tadabhyāsaparo bhavetr || (41)

மனதிலுள்ள எல்லாப் பற்றுகளையும் முற்றிலுமாக நீக்கி, அந்த மனதை இதயத்தில் உறுதியாக நிலை நிறுத்தி, விழிப்புணர்வை வலுப்படுத்துவதற்காக எந்த அறிவானது பிரகாசமாக விளங்குகின்றதோ? அந்த அறிவு முழுமையாக வலிமை அடையும்படி, எப்பொழுதும் அப்பியாஸம் செய்வாயாக.

**யே த்யாயந்தி பரம் சூன்யம் பவந்த்யாப்யாஸ தத்பராஹ் |**
**தே யாந்தி பரமம் ஸ்தானம் ஜன்ம மிருத்யு விவர்ஜிதம் ||** (42)

Ye dhyāyanti param soonyam bhavantyabhyāsa tatparāh |
Te yānti paramam sthānam janma mrityu vivarjitam || (42)

வெட்டவெளியாகிய பரவஸ்துவின் வெற்றிடமாகிய சூன்ய நிலையை யாரொருவர் எப்பொழுதும் தியானித்து நிற்கின்றார்களோ? அப்படிப்பட்ட மனிதர்கள் **பிறப்பு - இறப்பு** என்ற சம்ஸார சாகரத்தைக் கடந்த, பெருமைமிகு பிறவாப் பெரு நிலையாகிய முக்தி நிலையை அடைகின்றார்கள்.

**தேவதேவ்யஸ்ததா சான்யே தர்ம'தர்மோச்ச தத்பலம் |**
**ஆஸ்ரயாஸ்ரயி விஜ்ஞானம் ஸம்ஸாரஸ்ய ச பந்தனம் ||** (43)

Devadevyastatha chanye dharma'dharmocha tatphalam |
asrayasrayi vijnanam samsarasya cha bandhanam || (43)

அத்தகைய அற்புத பலனளிக்கும் முக்திப் பதத்தை அடைய நினைத்த முமுக்ஷுக்கள் மூர்த்தி தேவதைகளைப் போற்றி வணங்குவதும், உருவங்களில் அவர்களை பூஜித்து வழிபடுவதும், அதனால் உண்டாகும் பலன்களின் மீது ஆசைக்கொண்டு, அதன் வாயிலாக பாவ, புண்ணியங்களுக்கு உட்படுவதும் என, இவர்களது அறியாமையினால் விளைந்த விசய, சுகங்களின் பற்று, அவர்களை மிகப்பெரிய சம்ஸார பந்தத்திற்கு உட்படுத்தும்.

**ஆஸ்ரியோத்வந்த்வமித்யுக்தம் த்வந்த்வத்யாகாத்பரோதயஹ் |**
**ஜீவன்முக்தஸ்ததா யோகீ தேஹத்யாகாத்விமுச்யதே ||** (44)

āsryodvandvamityuktam dvandvatyāgātparodayah |
Jeevanmuktastadā yogee dehatyāgādvimuchyate || (44)

ஆசைகளினால் உண்டானவைகள் அனைத்துமே இருமைகளாக இருக்கின்றன. அந்த இருமைகளை இல்லாமல் செய்ய முடியுமானால், இருக்கின்ற ஒன்றேயான பரவஸ்து வெளிப்படும். ஆக, அத்தகைய இருமைகளை இல்லாமல் செய்த மாயோகி, **ஜீவன் முக்தன்** எனப்படுகின்றான். அவனே, சரீரத்திலிருந்து விடுதலையடையும் போது, **விதேகமுக்தன்** ஆகிறான்.

**வைராக்யேன வபுஸ்த்யாகோ நைவ கார்யோ மனீஷினா |**
**ஆரம்பதஹ் க்ரியாணாஸே ஸ்வயமேவ விபத்ஸ்யதே ||** (45)

Vairāgyena vapustyāgo naiva kāryo maneeshinā |
ārambhatah kriyānāse svayameva vipatsyate || (45)

உடல்மீது உண்டாகும் வெறுப்பினால், உடலை சுமையாகக் கருதி, அதை விட்டுவிட வேண்டும் என்று நினைப்பது விவேகம் ஆகாது. அந்த உடலின் உருவாக்கத்திற்குக் காரணமான **பிராரப்த கர்மா** (இப்பிறவியில் கொண்டுவந்த வினைப்பயன்கள்) தீர்ந்துவிடும்போது, அந்த உடல் தானாகவே வீழ்ந்து விடுமென்று அறிவாயாக.

**ஹ்ரீட்சரோஜேஹ்யஹம் ரூபா யா சிதிர்நிர்மலா'சல |**
**அஹங்கார பரித்யாகாத் ச சிதிர்மோக்ஷதாயினோ ||** (46)

Hritsarojehyaham roopā ya chitirnirmalā'chalā |
ahankāra parityāgāt sa chitirmokshadāyino || (46)

உள்ளம் என்ற இதய தாமரையில் **'நான்'** என்ற ஸ்புரணத்துடன் கூடிய, உணர்வு (பிரஞ்ஞை) பிரகாசிக்கின்றதோ? அது, மிகவும் தூய்மையானது, குறையற்றது. அத்தகைய உணர்வினிடத்திலேயே உதித்து, ஒடுங்குகின்ற

மனதின் அஹங்காரத்தை அழிப்பதன் வாயிலாக, அந்த உணர்வே மனதின் விடுதலைக்கு வித்தாகின்றது என்பதில், எல்லையில்லா மகிழ்ச்சி இருக்கின்றது.

**சர்வோப்தாஹி விநிர்முக்தம் சித்ரூபம் யந்நிறந்தரம் |**
**தச்சிவோஹமிதி த்யாதவ் ஆஸர்வசக்திம் விவர்ஜயேத் ||** (47)

Sarvopdāhi vinirmuktam chidroopam yannirantaram |
tachchivohamiti dhāytāv āsarvsāaktim vivarjayet || (47)

எந்தவிதமான உபாதிகளையும் (உடல்களையும்) சாராமல், அனைத்திலும் அறிகின்ற அறிவாக எது உள்ளதோ? அதுவே, "**நான்**" என்ற தன்னுடைய சித்சொரூபம் என்றறிந்து, அத்தகைய தன் சுயத்தை இடைவிடாமல் தியானிப்பதன் மூலம், விசய, சுகங்களாகிய பற்றுக்களை ஒழித்துவிடுவாயாக.

**தேசஜாத்யாதி சம்பந்தன் வர்னிஸ்ரமஸமன்விதன் |**
**பாவநேதன்பரித்யஜ்ய ஸ்வபாவம் பாவயேத்ஸதா ||** (48)

Desajātyādi sambandhan varnisramasamanvitan |
bhāvānetānparityajya svabhāvam bhāvayetsadā || (48)

தன்னுடைய தேசம், இருப்பிடம், பிறந்த சாதி என எல்லாவற்றிலும் இருக்கின்ற சம்பந்தத்தை அடியோடு நீக்கிவிட்டு, அதன் தொடர்புடைய அனைத்து விஷயங்களைப் பற்றிய, எல்லா எண்ணங்களையும் விட்டுவிட்டு, '**நான்**' என்னும் அகங்காரம் உதிக்கும், அதன் பிறப்பிடமாகிய தன்னிலையின் சொரூபத்தை பற்றிக்கொண்டு, எப்பொழுதும் அந்த ஸ்புரணத்திலேயே விடாமல் அப்பியாசம் செய்வாயாக.

**அஹமேகோ நமேகச்சித் நஹமன்யஸ்ய கஸ்யசித் |**
**நா தம் பச்யாமி யஸ்யாஹம் தம் ந பச்யாமி யோ மம ||** (49)

Ahameko namekaschit nahamanyasya kasyachit |
na tam pasyāmi yasyāham tam na pasyāmi yo mama || (49)

நான் ஒருவன் மட்டுமே தனியாக இருக்கிறேன். யாரும் எனக்கு சொந்தமானவர்கள் அல்ல. நான் வேறு யாருக்கும் சொந்தமானவன் அல்ல. என்னை அவருடையவன் என்று அழைக்கும் எவரையும் நான் பார்க்க வில்லை. எனக்கு எவராவது உரித்தவர்கள் என்றால், அப்படிப்பட்ட அவர்களையும் நான் பார்க்க வில்லை. என்னுடையது என்று எதுவுமே இல்லை. இருப்பது நான் ஒருவனே.

**அஹமேவ பரம்ப்ரஹ்ம ஜகந்நாததோ'ஹமீஸ்வரஹ் இதி |**
**ஸ்யாந்நிஷ்சிதோ முக்த: பத்தஹ் ஸ்யாதந்யதா புமான் ||** (50)

Ahameva parambrahma jagannāthoʼhameesvarah iti |
Syānnischito muktah baddhah syādanyathā pumān || (50)

**"நானே பரம பிரம்மன்! பிரபஞ்சநாதன் எனும் ஈஸ்வரனாக இருக்கிறேன்!"** இத்தகைய நழுவாத நிச்சயத்தன்மையை உடையவன் எவனோ? அவனே திடஞானி. அவனே உண்மையான முக்தன். அதைவிடுத்து, மாறுபட்ட பாதைகளில் பயணிக்கிறவன் பந்தமுடையவன் ஆகின்றான் என அறிவாயாக.

**அசரீரம் யதாத்மானம் பச்யதி ஞானசக்ஷுஷா |**
**ததா பவதி சாந்தாத்மா ஸர்வதோ விகதஸ்ப்ரிஹஹ் ||** (51)

Asareeram yadātmānam pasyati jnānachakshushā |
tadā bhavati sāntātmā sarvato vigatasprihah || (51)

ஒருவன் தன்னை தேகமற்றவனாக, தன் உண்மை சொரூபத்தை உள்ளது உள்ளபடி, தான் அடைந்த **ஞானக்கண்** (சாஸ்திர ஞானம்) கொண்டு, கண்டு விட்டான் என்றால், அப்பொழுதே அவன் அனைத்து ஆசைகளையும் அழித்தவனாக, பூரண அமைதியில், ஆனந்தத்தை அனுபவிக்கிறான்.

**யோ'ஸௌ ஸர்வேஷு சாஸ்த்ரேஷு. பத்யதே ஹ்யஜ ஈஸ்வரஹ் |**
**ஆகாயோ நிர்குணோஹ்யாத்மா ஸோ'ஹமஸ்மி ந ஸம்ஸயஹ் ||** (52)

Yo'sau sarveshu sāstreshu. Pathyate hyaja eesvarah |
akāyo nirgunohyātmā so'hamasmi Na samsayah || (52)

எல்லா சாஸ்திரங்களிலும் எவன் பிறப்பில்லாதவன் என்றும், ஈஸ்வரன் என்றும் கூறப்படுகிறானோ? அவன் தேகமில்லாதவனாகவும், குணமற்றவன் ஆகவும், ஆத்ம சொரூபமாகவும் இருக்கிறான். அவனே நான். அந்த சொரூபமே நானாக இருக்கிறேன் என்பதில், சிறிதும் சந்தேகமே கொள்ளாதே.

**விஜ்ஞாப்திமாத்ரோஹி ஸதாவிசுத்தஹ் ஸர்வத்ரயஸ்மாத்ஸததாம் விமுக்தஹ் |**
**நாதேயஹேயோஹ்யஹமப்ரதர்க்யஹ் தஸ்மாஸதா ப்ரஹ்மமயோ-விசோகஹ் ||** (53)

Vijnāptimātrohi sadāvisuddhah sarvatrayasmātsatatam vimuktah |
nādeyaheyohyahamapratarkyah tasmāsadā brahmamayo-visokah || (53)

நான் தூய்மையான விழிப்புணர்வு, நான் மாசற்ற, பரிபூரண விடுதலை பெற்றவன். மற்றும் நான் எங்கும், எதிலும், எக்காலத்திலும் இருக்கின்றேன். நான் எதனாலும் தீர்மானிக்க முடியாதவன். யாராலும் என்னைப் பிடிக்கவோ விட்டுவிடவோ முடியாது. நான் துக்கத்திலிருந்து விடுபட்டவன். நான் எப்போதும் பிரம்ம சொரூபமானவன்.

**ஆமஸ்தகம் பததலவசனம் சாந்தர்பஹிஷ்சர்மபதவாசனம் |**
**தத்க்ரித்ஸ்நமேவா மிருதரோகோபமன்யாத் சித்ரூபமாத்மானமனன்ய சித்தம் ||** (54)

āmastakam pādatalāvasānam sāntarbahischarmapatāvāsanam |
tatkritsnamevā mritarocopamanyat chidroopamātmānamananya siddham || (54)

நான் பூரண உணர்வு, முழுமையான முழுமை, மரணமற்ற மற்றும் சுயமாக நிலை நிறுத்தப்பட்ட என்னுடைய இருப்பு எல்லா உயிர்களின் உடலிலும் உச்சந்தலையிலிருந்து உள்ளங்கால் வரையிலும் என எல்லா உட்கருவிகளாகிய அந்தக்கரணத்தைக் கொண்டு, புறத்திலுள்ள இந்தச் சருமப்

போர்வையாகிய, இந்த ஜடமான தேகத்திற்கு அன்னியமான அறிவு (சித்) சொரூபமாய், எங்கும் நிறைந்த பூரணமாய் அம்ருதமாய், தன்னில் தானாகவே நிலைபெற்றுப் பிரகாசிக்கும் ஆத்ம சொரூபமே நானென்று அறிவாய்.

**ஈஷோ'ஹமேவாஸ்ய சராச்சரஸ்ய பிதா ச மாதா ச பிதாமஹஸ்ச |**
**த்யானம் ஸமாஸ்தாய பதம் சதுர்தம் த்யாயந்தி மாமேவ விமுக்திகாமாஹ் ||** (55)

Eesho'hamevāsya charācharasya pitā cha mātā cha pitāmahascha |
dhyānam samāsthāya padam chaturtham dhyyāanti māmeva vimuktikāmāh || (55)

அசையும் அல்லது அசையாத அனைத்து படைப்புகளுக்கும் நானே இறைவன், நானே இந்த பிரபஞ்சத்திற்கு தந்தை, தாய் மற்றும் தந்தையின் தந்தையாக பிரபஞ்சநாதனாக இருக்கிறேன் என்று எண்ணி, முக்தியை விரும்பும் முமுக்ஷுக்கள், யோகப்பாதையில் உள்ள நான்காவது நிலையான அறிவின்மீது ஆர்வத்துடனும் சிந்திக்கிறார்கள்.

**ப்ரஹ்மாதிபிர்தேவ மனுஷ்ய நாகைஹ் கந்தர்வா யக்ஷாப்ஸரஸங்கனைஷ்ச |**
**யஜ்ஞைரநேகைரஹமேவபூஜ்ஜ்யோ மாமேவ ஸர்வே ப்ரதிபூஜயந்தி ||** (56)

Brahmādibhirdeva manushya nāgaih gandharva yakshāpsarasānganaischa |
yajnairanekairahamevapoogjyo māmeva sarve pratipoojayanti || (56)

சிருஷ்டி கர்த்தாவாகிய பிரம்மா முதல் சகல தேவர்களாலும், ரம்பா, ஊர்வசி முதலான தேவ மாதர்களாலும், பூலோகத்திலுள்ள மனிதர்களாலும், யக்ஷர்களாலும், கந்தர்வர்களாலும், நாகலோக வாசிகளாலும், இதைப்போன்று இன்னும் எத்தனையோ கூட்டத்தினராகவுள்ள யாவரும், பலவிதமான யாக, யக்ஞங்களாலும் என்னையே அர்ச்சித்து ஆராதிப்பவர்கள் என்று அறிவாயாக. "**அனைவரும் அறிவாகிய என்னை மட்டுமே வணங்குகிறார்கள்**" என்பதை அறிந்து கொள்வாயாக.

**தபோபிருக்ரைர்விவிதைச்சதானைஹ் மாமேவ ஸர்வே ப்ரதிபூஜயந்தி |**
**பூதானி சாஹம் ஸ்திர ஜங்காமணி யாவந்தி சான்யான்யாஹமேவதானி ||** (57)

Tapobhirugrairvividhaischadānaih māmeva sarve pratipoojayanti |
bhootāni chāham sthira jangamani yāvanti chānyānyahamevatāni || (57)

போற்றுதலுக்குரிய அரிய தொண்டுகளாலும், தவங்களாலும், உயர்ந்த தானங்களாலும், பற்றறுத்தலாலும், எல்லோரும் என்னை மட்டுமே துதித்து வணங்குகிறார்கள். இங்கு பரந்து, விரிந்து காணும் படைப்பு முழுவதிலுமுள்ள அசையும் மற்றும் அசையாத அனைத்து பொருட்களும் என்னைத் தவிர வேறில்லை என்பதை அறிவாயாக.

**ந ஸ்தூலஸூக்ஷ்மோ ந ச சூன்யரூபோ ஞானைகரூபோ ஜகதேகபந்துஹ் |**
**நிரந்தரோ நிர்மலா ஈஸ்வரோ'ஹம் ஸ்வப்னாத்யவஸ்தாச்யுத நிஷ்ப்ரபஞ்சஹ் ||** (58)

Na sthoolasookshmo Na cha soonyaroopo jnānaikaroopo jagadekabandhuh |
nirantaro nirmala eesvaro'ham svapnādyavastāachyuta nishprapanchah || (58)

நான் ஸ்தூல உடலும் அல்ல, சூட்சும உடலும் அல்ல. காரண உடலும் அல்ல. நான் பிரபஞ்சத்தின் வெட்டவெளியாகிய சூன்யரூபமானவன். நானே ஞான (சித்) வடிவாகவும் இருக்கின்றேன். மேலும் நான் நித்தியமானவன். நானே எங்கும், எதிலும் உள்ள சர்வ வியாபியான ஈஸ்வரன் ஆவேன். நான் **விழிப்பு, கனவு** மற்றும் **ஆழ்உறக்கம்** இல்லாதவன். முடிவில் நான் இந்த பிரபஞ்சமாகவும் இல்லாதவன்.

**அனாதிவிஜ்ஞானமஜம் புராணம் குஹாஸயம் நிஷ்கலமப்ரபஞ்சம் |**
**நிரஞ்சனம் நிஷ்ப்ரதிமம் நிரீஹம் அத்ரிஸ்யமக்ராஹ்யமசிந்த்யரூபம் ||** (59)

Anādivijnānamajam purānam guhāsayam nishkalamaprapancham |
niranjanam nishpratimam nireeham adrisyamagrāhyamachintyaroopam || (59)

அனாதியான, ஞானமே வடிவான, மிகவும் பழமையான, பிறப்பு இறப்பில்லாத, எல்லோருடைய இதய குகையில் வாழ்கின்ற, அனைத்திற்கும் ஆதாரமான, பரவஸ்துவான எனக்கு எதையும் ஒப்பிட முடியாது. என்னை மனதினால் நினைப்பதற்கோ, கண்களால் காண்பதற்கோ, புலன்களால் உணர்வதற்கோ முடியாது.

**சனாதனம் ப்ரஹ்மநிராந்தரம் யத் படேபதே ஸோ'ஹமிதி ப்ரபஸ்யேத் |**
**யோ பவதாஸ்திஷ்டதி நிஷ்ப்ரகாம்ப்யஹ் ச ப்ரஹ்ம பூதோ'மிருததாமுபைதி ||**
(60)

Sanātanam brahmanirantaram yat padepade so'hamiti prapasyet |
yo bhāvatastishthati nishprakampyah Sa brahma bhooto'mritatāmupaiti || (60)

எப்போதும் சாசுவதமாய், கொஞ்சமும் இடைவெளியற்றதாய், எங்கும், எதிலும் நீக்கமற நிறைந்த அறிவு வடிவாகிய பரப்பிரம்ம பரவஸ்துவே நானென்று, அடிக்கடி அந்த ஏகாத்ம சொரூபத்தையே தியானித்து வருவாயாக. இவ்வாறு நீண்ட காலம் தியானம் செய்து, இடையூறின்றி நிலைத்திருப்பவர் பரப்பிரம்மமாகி, அழிவற்ற தன்மையை அடைவார்கள்.

**ஞானமேவம் வாராரோஹே கதிதம் மோக்ஷசித்தயே |**
**ஆச்சரம் கத்யமானம் து ஸம்ப்ரதம் ஸ்ருணுதன்மய ||** (61)

Jnānamevam varāarohe kathitam mokshasiddhaye |
ācharam kathyamānam tu sāmpratam srunutanmayā || (61)

எப்பொழுதும் கிடைக்கும் முக்தியை அனைவரும் அடையும் வகையில் அறிவின் தன்மையை, ஞானத்தின் சொரூப லக்ஷணம் இவ்வாறானதென்று என்னால் இதுவரை கூறப்பட்டது.

தன்மயமானவளே! இப்பொழுது முமுட்சுக்களாகிய சாதகர்கள் சாதிக்க வேண்டிய ஆசாரங்களைச் சொல்லுகிறேன். அவற்றை பரபரப்பு இல்லாமல் நீ கூர்ந்து கவனமாகக் கேட்பாயாக.

**ந ஸ்நானம் ந ஜபஹ பூஜா ந ஹோமோ நைவ சாதனம் |**

**அக்னிகார்யாதி கார்யம் ச நைதஸ்யாஸ்தி மஹேஸ்வரி ||** (62)

Na snānam na japah poojā na homo naiva sādhanam |
agnikāryādi kāryam cha naitasyāsti mahesvari || (62)

ஓ பெண்களில் ராணியே! புனித தீர்த்தங்களில் நீராடுதல், புனித நாமங்கள் அல்லது வார்த்தைகள் (மந்திரங்கள்) உபாசித்தல், நித்ய கர்மாவாகிய அக்னி ஹோத்ரம் போன்ற தினசரி ஹோமங்கள், பூசை, புணஸ்காரங்கள், வழிபாடுகள், மற்ற பிரசாதங்கள் என எல்லா வழிகளில் அனுஷ்டிக்க வேண்டிய எந்த ஒரு சாதனமும், ஞான அப்யாசியான அதிகாரிக்கு அவசியம் இல்லையென்று நீ அறிவாயாக.

**நியமோ'பி ந தஸ்யாஸ்தி க்ஷேத்ர பீதே ச ஸேவனம் |**
**நார்ச்சனம் பித்ரிகார்யாதி தீர்த்தயாத்ரா வ்ரதானி ச ||** (63)

Niyamo'pi na tasyāsti kshetra peethe cha sevanam |
nārchanam pitrikāryādi teerthayātrā vratāni cha || (63)

மோக்ஷத்தின் மீது இச்சையுள்ள முமுக்ஷுவுக்கு, ஞானாப்யாசிக்கு, நியமங்களோ (என்ன சாப்பிட வேண்டும், எப்போது சாப்பிட வேண்டும், எப்படி சாப்பிட வேண்டும், என்ன உடுத்த வேண்டும், எங்கு உட்கார வேண்டும் போன்ற பல கடுமையான நடத்தை விதிகள்), கோவில்களில் மற்றும் க்ஷேத்திர பீடங்களில் விளங்கும் மூர்த்திகளுக்கு, நிகழ்த்துகின்ற வந்தனை வழிபாடுகளோ, நாம அர்ச்சனைகளோ, மூதாதையர்களாகிய பித்ருக்களைக் குறித்துச் செய்யும், சிறப்பு மிகுந்த பித்ரு காரியங்களோ, பூமியில் பிரசித்தமாகத் தோன்றியுள்ள புனிதத் தலங்களான தீர்த்த யாத்திரைகளோ, பெருமையும், பிரசித்தியும் பெற்ற புண்ணிய விரதங்களோ, இவையாவும், அடைந்த ஞானத்தின் வாயிலாக விசாரம் செய்து, ஆராய்ந்து சிந்தித்துப் பார்க்கும்போது, அத்தகைய ஞானாப்யாசிகளுக்கு இவைகளில் ஒன்றுகூடத் தேவையில்லை.

**தர்ம'தர்ம பலம் நாஸ்தி ந திதிர்லௌகிகீக்ரியா |**
**ஸந்த்யஜேத்ஸர்வகர்மாணி லோகாச்சாராஷ்ச ஸர்வஸஹ் ||** (64)

Dharma’dharma phalam nāsti na tithirlaukikeekriyā |
santyajetsarvakarmāni lokāchāraāsca sarvasah || (64)

ஞானிகள் செய்யும் செயல்களில் **தர்மம் - அதர்மம், பாவம் - புண்ணியம்** என எதிலும் பலாபலன்கள் இருப்பதில்லை. அவன் செய்யும் செயல்களின் பலன்கள் நல்லதோ? கெட்டதோ? அதை அவன் அறுவடை செய்வதில்லை.

விசேஷமான தினங்களிலும், அதில் வரும் திதிகளிலும், உலகத்தவர்கள் தொன்று தொட்டுச் செய்துவரும் கர்மங்களுக்கு இவனிடம் இடமில்லை. ஆகவே, எல்லாவிதக் கர்மங்களையும் அறவே ஒழித்துவிடு. உலகத்தினரால் அனுஷ்டிக்கப்படும் அனைத்து விதமான ஆசாரங்களையும் விட்டுவிடு.

**சமேஸ்சாஹ்ரா நிஷ்சேஷன் கிருத்யஜ்தாம் து பந்தனம் |**
**சங்கல்பம் ச விகல்பம் ச யே ச்னாயே குலதர்மிகா ||** (65)

Samaycāhrāa nihseshan krityajtāam tu bandhanam |
sankalpam cha vikalpam cha ye chnāye kuladharmikāh || (65)

மதக் கட்டளைகள் மற்றும் சமயத்தின் ஆசார ஒழுங்கு முறைகளை முற்றிலும் கைவிடுங்கள். ஏனெனில், எல்லாவிதமான தர்மங்களும் அவனுக்கு பந்தங்களாக அமையும். ஆதலால் பலவாகத் தோன்றும் சங்கற்பங்களையும், விகற்பங்களையும், அத்துடன் தான் பிறந்த ஜாதியையும், ஜாதி தருமத்தையும், அவற்றைச் சார்ந்துள்ள பற்றுதலையும் தூரத்தள்ளிவிடு. எல்லா வகையான செயல்களும் அடிமைத்தனத்தில் விளைவதால், அனைத்து செயல்களையும், திட்டங்களையும், மன மோதல்களையும், ஜாதிக் கடமைகளில் உள்ள பற்றுதல்களையும் கைவிடுங்கள்.

**சித்திச்ச விவிதாகார பாதலாதி ரசாயனம் |**
**ப்ரத்யக்ஷேனாஹலப்த்வா’பி நைவ க்ரிஹ்னீத ஸாதகஹ் ||** (66)

Siddhischa vividhākārā pātālādi rasāyanam |
pratyakshenahalabdhvā’pi naiva grihneeta sādhakah || (66)

அட்டமா சித்திகளான அணிமா, மஹிமா முதலானவைகளையும், பூமிக்கு அடியில் புதைந்து கிடப்பதைக் கண்கூடாகக் காண்பது போன்ற, பலவிதமான அமானுஷ்ய சக்திகளையும், மறைவாகவுள்ள பொருள்களைக் கண்ணெதிரில் தோன்றச் செய்யும் மாயாஜால வித்தைகளையும், இந்த உலகுக்கு முன் எடுத்துரைக்க முடியும் என்றாலும், அவற்றின் மீதான மனப் பற்றுதலைக் கண்டிப்பாக கைவிட வேண்டும்.

**ஸர்வேதேபசுபந்தஸ்யுஹ் அதோமார்கப்ரதாயகா |**
**ஏதைர்னாஸ்தி பரமுக்திஹ் சித்ரூபம் வ்யாபகம் வினா ||** (67)

Sarvetepasubandhāsyuh adhomārgapradāyakāh |
etairnāsti parāmuktih chidroopam vyāpakam vinā || (67)

சித்திகள் அனைத்தும் இந்த ஜீவனுக்கு விடமுடியாத பந்தங்களாகும். மேலும், இத்தகைய சித்திகள் கீழ்த்தரமான தீய செயல்களையும், ஒழுக்கமின்மையையும் தரக்கூடியவைகளாகும். எங்கும் நிறைந்து பிரகாசிக்கும் அறிவு சொரூபத்தினிடமே, அந்த மேலானமுக்தி சுகமானது இருக்கிறதேயன்றி, அதைவிட்டு, மேலே கூறப்பட்ட இவைகள் எதிலும் இல்லை.

**யேனகேன விசேஷேண ஸர்வாவஸ்தோ'பி யோகத்ரித் |**
**க்ஷேத்ரபீதே ச ஸந்தேஹியாத் வர்ஜயேத்யாதிகௌதுகம் ||** (68)

Yenakena viseshena sarvāvastho'pi yogadhrit |
kshetrapeethe cha sandehiāt varjayedyadikautukam || (68)

எந்த ஒரு விசேஷ நிகழ்வும் ஒருவரை மோசமாகப் பாதிக்க அனுமதிக்காமல், எல்லா நிலைகளிலும் தவறாமல் ஆத்ம சிந்தனையாகிய யோகத்தில் மனம் ஒன்றியவனாய், எந்த சூழ்நிலையிலும், எக்காரணத்திலும், புனித ஸ்தலங்களிலும், கோவில்களிலும் (கடந்தகால நடைமுறைகள் மற்றும் வாசனைகள் காரணமாக) வழிபாடு செய்ய வேண்டும் என்ற ஆர்வத்தில், எந்த வடிவத்தில் அந்த மாயை தோன்றினாலும், உடனடியாக அதை நிராகரிக்கவும்.

**க்ரீமிகீதபதாங்காம்ச ததா தேவி வனஸ்பதிம் |**
**ந நாசயேத்புதோஜீவன் பரமார்த்தமதிர்யதஹ் ||** (69)

Krimikeetapatangāmscha tathā devi vanaspatim |
na nāsayedbudhojeevān paramārthamatiryatah || (69)

நான் சொல்வதைக் கேள், பெண்ணே! ஞானாப்யாசியான நல்ல விவேகமுள்ளவன், உண்மை அறிவாகிய ஞானசொரூபத்தை ஆசிரயித்த மனத்தினை உடையவனாய் இருக்க வேண்டும். பூச்சிகள், புழுக்கள், பறவைகள், மரங்கள், செடி, கொடிகள் என, எந்த ஒரு உயிரினத்தையும் அழிக்கும் காரியத்தை எப்போதும், எந்த சூழ்நிலையிலும் உண்மையான அறிவைத் தேடுபவர் செய்யக்கூடாது என்பதை அறிவாயாக.

**ந மூலோத்பதானம் குர்யாத் பத்ரச்சேதம் விவர்ஜயேத் |**
**பூதபீடம் ந குர்வீத புஷ்பானம் ச நிகரிந்தனம் ||** (70)

Na moolotpātanam kuryāt patrachchedam vivarjayet |
bhootapeedām Na kurveeta pushpānām cha nikrintanam || (70)

விவேகமுள்ள சாதகன், பூஜைக்காக எந்த ஒரு வேரையும் பிடுங்கக்கூடாது. செடியிலிருந்து எந்தவொரு இலைகளையும், மலர்களையும் பறித்து, அதைச் செடியிலிருந்து வேறு படுத்தக்கூடாது. உலகிலுள்ள எந்த உயிர்களுக்கும் துன்பம் விளைவிக்கக்கூடாது. கோபத்தினால் மற்றவைகளுக்கு துன்பத்தைத் தரக்கூடிய செயல்கள் எதுவுமே செய்யக்கூடாது.

**ஸ்வயம் பதிதா புஷ்பைஸ்து கர்தவ்யம் சிவபூஜனம் |**
**மரணோச்சதனாதீனி வித்வேஷஸ்தம்பனே ததா ||** (71)

Svayam patita pushpaistu kartavyam sivapoojanam |
māranochchātanadeeni vidveshastambhane tathā || (71)

நாமாகச் செடியிலிருந்து பறிக்காமல், தாமாகவே கீழே உதிர்ந்த தூய மலர்களை எடுத்து, அவற்றினால் சிவனுக்கு உகந்த பூஜை செய்வதே சிறப்பாகும். இதுவே சிவத் தொண்டனின் மானசீகமான சிவ பூஜையாகும்.

இந்த உயர்ந்த பூஜையை விட்டுவிட்டு, சில மந்திரங்களைப் பயன்படுத்துவதன் மூலம் அழிவை ஏற்படுத்துதல், உச்சதானா மந்திர சக்தியால் ஒருவனை கட்டுப்படுத்தி வைத்தல், அல்லது வெளியேற்றுதல், வித்வேஷனா என்பதின் வாயிலாக நண்பர்களிடையே பரஸ்பர வெறுப்பை ஏற்படுத்துதல், இத்துடன் நன்கு அறியப்பட்ட ஸ்தம்பனா முறையில் ஒருவரின் திறன்களை முடக்குதல் போன்ற இழிவான காரியங்களை செய்யக்கூடாது.

**ஜ்வரபூதக்ரஹாவேசவாஸ்யாகர்ஷணமோஹனம் |**
**ந குர்யாத் க்ஷுத்ரா கர்மாணி காஷ்டபாஷானா. பூஜனம் தி ||** (72)

Jvarabhootagrahāvesavasyākarshanamohanam |
Na kuryāt kshudra karmāni kāshthapāshāna. poojanam ti || (72)

மந்திர ஜபத்தினால், உயிர்களுக்கு காய்ச்சலை உண்டுபண்ணுதல், பஞ்சபூதங்களை கட்டுப்படுத்தி, இயற்கையை ஏவலாளியாக மாற்றுதல், துஷ்ட சக்திகளை பிறர்மேல் ஏவி விடுதல், திடீரென்று விரைந்து எழக்கூடிய ஆவேசத்தை உண்டு பண்ணுதல், வசியமாக்குதல், மோகமடையச் செய்தல் என்று பலவாகச் கூறப்படும் இத்தகைய இழிவான செயல்களை ஒரு நாளும் செய்யக்கூடாது. கல்லிலும், மரக்கட்டையிலும் பூஜை செய்வதை முற்றும் ஒழித்து விடுவாயாக.

**ந முத்ரஷ்ச மகம் தத்த்வா க்ஷேத்ரபீதே ச தேவதே |**
**கிருதகான் வசனாம்ஸ்த்யக்த்வா வ்யாபகம் போதமாஸ்ரயேத் ||** (73)

Na mudrascha makham dattva kshetrapeethe cha devate |
kritakān vāsanāmstyaktvā vyāpakam bodhamāsrayet || (73)

புண்ணிய ஸ்தலங்கள் தொடர்புடைய ஹோமங்களில், பூசைகளில் வசிக்கும் தேவதைகளின் பொருட்டாக, அந்தந்த ஸ்தானத்தில் மனதைச் சேர்த்து நிறுத்துகின்ற போது, காட்டப்படும் முத்திரைகளையும், அவற்றை உத்தேசித்து ஆர்வமுடன் செய்யப்படும் யாகங்களையும் நீக்கி, வாசனைகள் காரணமாக அவைகள் வெளிப்படாதவாறு அழித்துவிட்டு, எங்கும் நிறைந்து பிரகாசிக்கும் உண்மையறிவாகிய சித்சொரூபத்தையே தியானிப்பாயாக.

**சமதவீதர்காத்வம் ஸமத்வம்சுகதுஹ்கயோஹ் |**
**சமோ'மித்ரே ச மித்ரே ச ஸமோலோஷ்தே ச காஞ்சனே ||** (74)

Samatā veetargāatvam samatvamsukhaduhkhayoh |
samo'mitre cha mitre cha samoloshthe cha kānchane || (74)

எல்லாவற்றிலும் சமதிருஷ்டியுடையவனாய், எந்த ஒரு பொருளினிடமும் ஆசையுடன் கூடிய நேசம் கொள்ளாமல், சுகதுக்கங்கள் நேரிடும் காலத்தில், அவைகள் இரண்டிலும் சம பாவமுற்று, உயிருக்குயிரான நண்பர்கள், அதற்கு நேர்மாறான எதிரிகள் ஆகிய இருவரிடத்திலும் சமதிருஷ்டி உடையவனாய் இருப்பாயாக. அவ்வாறே, மண்ணையும் பொன்னையும் சமமாக பாவிக்கும் பேதமற்ற சமபுத்தியுடையனாய் இருப்பாயாக.

**அபில்சாஹோ ந கர்தவ்யா இந்த்ரியர்தே கட்சாஹனா |**
**ஆத்ம்ராமோ பவேத்யோகீ நிர்மமோ விகதஸ்ப்ரிஹஹ் ||** (75)

Abhilsāho na kartavya indriyrāthe kadcāhana |
ātmrāamo bhavedyogee nirmamo vigatasprihah || (75)

புலனின்பத்தின் மீதான ஆசைகளினால் மனம் அலைக்கழிக்கப்படாமல் எனதென்னும் மமதையை ஒழித்து, எதிலும் சோர்ந்து போகாமல் வலிமை பெற்று, எதனிடமும் ஆசையோ, பயமோ இன்றி, எப்பொழுதும் ஆத்ம சொரூபத்திலேயே இலயித்துக் கொண்டிருப்பவனே மாசற்ற மகிமை வாய்ந்த யோகியாவானென்று அறிந்திடுவாய்.

**சமநிந்தியா ப்ரஸம்ஸச்ச ஸர்வபூதஸமஸ்ததா |**
**சமதரிஷ்டிஸ்து கர்தவ்யா யதாத்மனி ததாபரே ||** (76)

Samanindiā prasamsascha sarvabhootasamastathā |
samadrishtistu kartavyā yathātmani tathāpare || (76)

பிறர் தன்னை புகழ்வதினாலும், இகழ்வதினாலும் பாதிக்கப்படாமல், அதனால், மகிழ்ச்சியோ, வருத்தமோ வராமல், இரண்டிலும் சமபாவனை உள்ளவனாய், எல்லா உயிரினங்களையும் தன்னைப் போலவே கருதி,

எல்லாவற்றிலும், எப்போதும் ஒரு சமத்துவப் பார்வையை (சம திருஷ்டி) கொண்டிருக்க வேண்டும்.

**விவாதம் லோககோஷ்தீஞ்ச கலஹம்ச விவர்ஜயேத் |**
**சாஸ்திரகோஷ்டீன்னாகுர்வீத குபாஷிதா சுபாஷிதன் ||** (77)

Vivādam lokagoshtheencha kalahāmscha vivarjayet |
sāstragoshtheennakurveeta kubhāshita subhāshitān || (77)

பிறருடன் தேவையற்ற வாக்குவாதங்களில் ஈடுபடுவதும், உலக விவகாரங்களில் வீணாக ஈடுபட்டுக்கொண்டு, அதன் வாயிலாக மனக்கிலேசங்களுக்கு வழிவகுத்துக் கொண்டு, மற்றவர்களிடையே தவறான புரிதலை ஏற்படுத்துவதை தவிர்ப்பாயாக. பல சாஸ்திரங்களை கற்றறிந்த பாண்டித்யம் காட்டும், பண்டிதர்களிடம் சேராமல் இருப்பீர்களாக. மேலும், எந்தவிதமான ஆன்மீக அமைப்புகளிலும் சேராதீர்கள். மற்றவர்களைப்பற்றி துஷ்பிரயோக வார்த்தைகள் மற்றும் பாராட்டு வார்த்தைகள் ஆகிய இரண்டையும் விட்டுவிடுங்கள்.

**ஈர்ஷ்யாம் பைசூன்ய தம்பூ ச ராகம் மாத்ஸர்யமேவ ச |**
**காமக்ரோதௌ பயம் சோகம் த்யஜேத்ஸர்வம்சனைஹ் சனைஹ் ||** (78)

Eershyām paisunya dambhou cha rāgam mātsaryameva cha |
kāmakrodhou bhayam sokam tyajetsarvamsanaih sanaih || (78)

அடுத்தவரைக் கண்டு பொறாமைப்படுவது, அவதூறு பேசுவது, ஆடம்பரமாக வாழ்வது போன்றவைகளை தவிர்ப்பது நலம். அடுத்து, அது வேண்டும், இது வேண்டாம் என்ற **விருப்பு, வெறுப்பு** போன்ற இருமைகளில் சிக்காமல் இருக்க கற்றுக் கொள்ளுங்கள். அத்துடன், ஆசை, கோபம், பயம் மற்றும் துக்கம் ஆகியவற்றிலிருந்து படிப்படியாகவும், முழுமையாகவும் விடுபடுவது இவைகளை அவசியம் மேற்கொள்ளுங்கள்.

**ஸர்வத்வந்த்வவிநிர்முக்தஹ் ஸந்ததம் ஜநவர்ஜிதஹ் |**
**அனேனைவ சரீரேண ஸர்வஜ்ஞா ஸம்ப்ரகீஆஸதே ||** (79)

Sarvadvandvavinirmuktah santatam janavarjitah |
anenaiva sareerena sarvajnah samprakiāsate || (79)

ஒரு மனிதன் எல்லா எதிர் நிலைகளிலிருந்தும் விடுபட்டு தொந்தங்களென்று கூறப்படும் இரட்டைகளாகிய சுக, துக்கமனைத்தும், தன்னைத் தொடராதவாறு, அவைகளை விலக்கிவிட்டு, எப்பொழுதும் மனதினால் பலவற்றைப் பற்றாமல், ஏகாந்தமாய் அந்த அறிவில் நிலைத்து நிற்பவன்தான், இந்தச் சரீரம் உள்ளபோதே, முற்றும் உணர்ந்த சர்வக்ஞனாகி, திடமாக நிலைப்பெற்ற திவ்ய சித்தின் தேஜஸ்ஸுடன் ஒளி விட்டுப் பிரகாசிப்பான் என்று அறிவாயாக

**ஞானேனைவ ஹி மோக்ஷஹ் ஸ்யாத் பவேத் ஸித்தி நிரர்த்தகா |**
**ததா'பி போகமிச்சந்தி சித்திமிச்சந்தி ஸாதகஹ் ||** (80)

Jnānenaiva hi mokshah syāt bhavet siddhi nirarthakā |
tathā'pi bhogamichchanti sidhdhimichchanti sādhakāh || (80)

ஞானத்தால் மட்டுமே மனம் விடுதலை அடையப்படுகிறது. ஞானத்தை விட்டுவிட்டு, மற்ற சக்திகளால் (சித்திகளால்) அத்தகைய பலனை அடைய முடியாது. ஞானத்தினால்தான் நல்லதெனப் போற்றப்படும் **பரமுக்திப் பதத்தை** அடைய முடியும் என்பதை அறியாத பலரும், பாதைகள் பலமாறி கறைபடிந்த உலக இன்பங்களாலும், குற்றம் மிகுந்த போகங்களாலும் அணிமா, மஹிமா முதலான சித்திகளாலும், புத்தி மயக்கத்தினால் மோகம் கொண்டு, அவற்றைத் தாம் அடைய ஆசைப்பட்டு வேண்டிடுவர்.

**அணிமாதிகுணவப்திர்ஜயாதாம் வா ந ஜ்யாத்மா |**
**ததா'பி முச்யதே தேஹீ பதிம் விஜ்ஞாய நிர்மலம் ||** (81)

Animādigunāvaptirjāyatām vā na jyāatmā |
tathā'pi muchyate dehee patim vijnāya nirmalam || (81)

தூய்மையான, குற்றமற்ற யோகியானவன், அணிமா, மஹிமா முதலான இயற்கைக்கு அப்பாற்பட்ட அட்டமா சித்திகள் வந்து சேர்ந்தாலும், அல்லது அவைகள் வந்து அணுகாமலே அகன்று ஒழிந்தாலும், அதைப் பற்றிய

மகிழ்ச்சியோ, துக்கமோ அடையாதவனாய், நிர்மலமான அப்பிரம்ம சொரூபத்தை உணர்ந்து, மோட்ச வீட்டை அடைவதிலிருந்து தப்பவே மாட்டான் என்றறிவாயாக.

**பஞ்சபூத்தமகோதேஹா சிவஸ்தத்ரைவ திஷ்டதி |**
**சிவ்தாயவனிபர்யந்தம் லோகோ'யம் சங்கர்தமகா ||** (82)

Panchabhoottāmakodehah sivastatraiva tishthati |
sivdāyavaniparyantam loko'yam sankartāmakah || (82)

உடல் என்பது ஐந்து கூறுகளால் (பூமி, நீர், நெருப்பு, காற்று மற்றும் ஆகாயம்) அமைக்கப்பட்ட ஒரு பஞ்சபூத வடிவம். எங்கும் நிறைந்த பரமனும் சீவ சாட்சி மாத்திரமாக பொருந்தி, அங்கேயே அமர்ந்திருக்கிறார். எனவே, பிரிவற்று எங்கும் அகண்டமாய் நிறைந்திருக்கும் சிவம் முதலாக (சிவ தத்துவம் முதலாக) இந்தப் பூவுலக பரியந்தம் உள்ள அனைத்துலகமும் சங்கரனுடைய சொரூபமேயாகும்.

**ஈத்ரீசம் ஞானினாம் த்ரிஷ்ட்வா பூஜயந்தி ச யே நராஹ் |**
**கந்தம் புஷ்பம் பலம் தூபம் ஸ்நானம் வஸ்த்ரம் ச போஜனம் |**
**நிவேதயந்தி யே கேச்சித் வாங்மனாஹ் காயா கர்மபிஹ் ||** (83)

Eedrisam jnāninam drishtvā poojayanti cha ye narāh |
gandham pushpam phalam dhoopam snānam vastram cha bhojanam |
nivedayanti ye kechit vāngmanah kāya karmabhih || (83)

ஞானம் பெற்றவரைக் கண்டு, தரிசனம் செய்து, வாசனை மிகுந்த சந்தனாதிகளும், சுவையுள்ள நல்ல பழங்களும், மணம் நிறைந்த மென்மையான மலர்களுடன், நல்ல நறுமணம் வீசும் தீம்புகையும், பரிமளங்கள் கலந்த ஸ்நானத்திற்குரிய தீர்த்தமும், தூய உடையும், சுவையான உணவும், நெஞ்சுருகும் உள்ளன்புடன் அவர்களுக்குக் கொடுத்து, மனம், வாக்கு, காயமென்னும் முக்கரணங்களினாலும் ஒன்றாக இசைந்து, எவர் வந்தனை, வழிபாடு செய்து, ஆராதித்திடுவார்களோ, அவர்களும் அவன் அருளாலே வீடுபேறு அடைவார்கள்.

**ததைவ தேவி முச்யந்தே முக்திமார்காபிகாங்க்ஷிணா |**
**ஸ்துதி நிந்தாகாரஸ்தஸ்ய புண்யம் பாபமவாப்னுயுஹ் ||** (84)

Tathaiva Devi muchyante muktimārgābhikānkshinah |
stuti nindākarāstasya punyam pāpamavāpnuyuh || (84)

அன்பே உருவானவளே! அந்த ஞானியை வழிபடுபவர்கள் அவருடைய சன்மார்க்கத்தின் பலனைப் பெறுகிறார்கள். புருஷ ஸ்ரேஷ்டனாகிய அந்த ஞானியை பூஜிப்பவர்கள், அவனால் செய்யப்படும் புண்ணிங்களின் பலனையும், அவரைப்பற்றி அவதூறு பேசுபவர்கள் அவருடைய பாவங்களின் பலனையும் பெறுகிறார்கள் என்பதை அறிவாயாக.

**யத்ஜ்ஞானசரணம் பிருஷ்டம் தத்ஸர்வம் கதீனம் மயா |**
**காலஜ்ஞானம் வராரோஹே கிமன்யச்ச்ரோதுமிச்சஸி ||** (85)

Yatjniānācharanam prishtam tatsarvam kathinam mayā |
kālajnānam varārohe kimanyachchrotumichchasi || (85)

தேவி! நீ கேட்டுக் கொண்டதுக்கு இணங்க, மெய்யறிவாகிய ஞானமும், அதற்கான ஆசாரமும் என்னென்ன என்பதை, விரிவாக உனக்கு இதுவரை விளக்கப்பட்டது. என்னால் போதிக்கப்பட்ட இந்த மார்க்கங்கள் எல்லாம் உண்மையில் **காலோத்தரஞானம்** (*முதிர்ச்சியின் இறுதிக்கட்டத்தில் வெளிப்படும் அறிவு*) ஆகும்.

ஓ தேவி! நீ இன்னும் ஏதாவது கேட்க விரும்பினால் என்னிடம் கேட்பாயாக.

**ஓம் தத் ஸத்!**

# முடிவுரை

இந்த நூலின் ஆரம்பத்தில் பரமனைப் பார்த்து, பார்வதி தேவி கேட்கும் போதே, அனைவருக்குமான முக்திப் பாதையைக் காட்டுமாறு கேட்கிறாள். இதிலிருந்து முக்தியானது அனைவர்க்குமே உரித்தானது என்று அறியலாம்.

இறைவனும் இந்தக் கிரந்தத்தை ஆரம்பிக்கும்போதே, மனதின் உயர் பக்குவ நிலையாகிய தன்னை அறியும் ஞானத்தின் மூலம், தனது இதயத்தில் உள்ள உண்மையை உணர முடியாதவர்கள், வானத்தைப்போல பரந்து விரிந்து கிடக்கும் எண்ணற்ற சாஸ்திரங்களை பரோக்ஷ ஞானமாக கோடிக்கணக்கில் கற்றாலும், ஒருநாளும் அவர்களுக்கு அபரோக்ஷ ஞானமாகிய தன் **சொரூப ஞானம்** உதிக்காதென்று கூறினார்.

அப்படிக் கூறியதின் ஆழமான பொருள் என்னவெனில், இந்த நூலானது ஞானத்தைப் போதித்து, மெய்யுணர்வை உண்டாக்குவதில் **இதற்கு நிகர் இதுவே!** என்பதாகும்.

அப்படிப்பட்ட உயர்ந்த ஞானத்தையும், மேலான ஆசாரத்தையும், நீ கேட்டபடி நான் உனக்குக் கூறிவிட்டேன். இன்னும் உனக்கு ஏதாவது கேட்பதற்கு இருந்தால், அதை கேட்பாயாக! என்று இறுதியில் பரமசிவன் பார்வதி தேவியிடம் கேட்கிறார். அவரது அந்த கேள்விக்கு பதிலாக மௌனத்தை மட்டுமே தேவி வெளிப்படுத்தினாள்.

அதற்குக்காரணம், இதற்கு மேலாக கேட்பதற்கு ஏதுமில்லை என்பதை, மோன நிலையாகிய வெட்டவெளியில், மனமற்ற தன்னிருப்பில், மகத்தான சூன்யத்தில், அந்த ஏக அறிவாக இருப்பு கொண்டு விட்டாள்.

தேவியின் இந்த நிலையை வெளிப்படுத்தும், "**தேவி காலோத்தரம்**" என்ற இந்த நூலைக் கற்று முடித்த முமுக்ஷுக்கள் அனைவருக்குமே, அந்த கேவல நிலையாகிய மோன நிலை உணரப்பெற்று, பிறவாப் பெருநிலையாகிய **பரமுக்தி** எனும் **காலோத்தரஞானம் கிடைக்கப்பெற்றது.**

**நிறைவு.**

# தேவி காலோத்தரம்

**அஹமேவ பரம்ப்ரஹ்ம ஜகந்நாததோ'ஹமீஸ்வரஹ் இதி |**
**ஸ்யாந்நிஷ்சிதோ முக்த: பத்தஹ் ஸ்யாதந்யதா புமான் ||** (50)



**"நானே பரம பிரம்மன்! பிரபஞ்சநாதன் எனும் ஈஸ்வரனாக இருக்கிறேன்!"** இத்தகைய நழுவாத நிச்சயத்தன்மையை உடையவன் எவனோ? அவனே திடஞானி. அவனே உண்மையான முக்தன். அதைவிடுத்து, மாறுபட்ட பாதைகளில் பயணிக்கிறவன் பந்தமுடையவன் ஆகின்றான் என அறிவாயாக.